"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகழ்ப்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1892ஹு ஜூலைமீ. இலக்கம். 3.

## இல்லாண்மை,

இல்லாண்மை— அதாவது, இல்லத்தை ஆளுந்தன்மை— என்பது இல்வாழ்க்கைக்கணின்று வாழ்பவர் யாவர்க்கும் இன்றியமையாத இயல்புகளை எடுத்துக்கூறும் நூல். அது உண்டிகளின் வகைகளை எடுத்துரைத்து அவைகளை நன்காக அமைக்குந் திறங்களை விளக்கிக்காட்டும்; உடைகளின் வகைகளைத் தெரிந்து சொல்லி, அவைகளைப்பேணும் முறையினையும், பழுதுநேரின் அதனைத்திருத்தும்விதத்தினையும், அழுக்கடையின் அதனைப் போக்கும் வழிகளையும் புலப்படுத்தும்; இல்லமமைத்துக்கோடும் நெறியினையும் அதில்வாழ்பவர்களுக்குநோயுண்டாகாதபடி அதனைத்தூய்தாயும் நல்லகாற்றினையுடையதாயும் வைத்திருக்கும் வழிவகைகளையும்,நோயுண்டாகில்நோயாளிகளை *உழையிருந்து மருந்தியற்றுந்திறத்தினையும்எடுத்துப்பேசும்; குழந்தைகளைவளர்க்கும்விதத்தினையும் வேலைக்காரரை ஆளும் முறைமையினையும்,பசுமுதலிய விலங்குசாதிகளைக் காக்குந் தன்மையினையும் சொல்லும்;நாடோறும் வரவு செலவுக்கணக்கெழுதி, செலவினை வருவாய்க்குத்தகக் கட்டுப்படுத்தி நடக்குந்தன்மையினையும் உணர்த்தும்.

நாம் பெரும்பாலும் இல்லத்திலேயே நமது காலத்தின் பெரும்பாகத்தைக் கழிக்கின்றோம்; அதனால் நமது உடல்நோயின்றியிருப்பதற்கும், நோயடைந்து துன்பமுழப்பதற்கும் பெருங்காரணம் இல்லமாகின்றது. ஆகவே இல்லத்தை நோய்முதலணுகாதபடி போற்றுவது நமது கடனும்; அவ்வாறு போற்றாது †மடிந்திருப்போமாயின், நமது இல்லத்தில் நிகழும் நோய்கட்கெல்லாம் நாமேகாரணமாகி, நமக்கும் நம்மையடைந்தார்க்கும் மாறாத்துயரை வருவிப்போம்.

"உண்டிகொடுத்தோருயிர் கொடுத்தோரே
உண்டிமுதற்றே உணவின்பிண்டம்"*

என்று ‡குடபுலவியனார் கூறியபடி, உண்டி உயிர்க்கு இன்றியமையாதது; உண்டியொழியின் உயிரழியும். அவ்வுண்டியே நமது பகுதிக்கொத்த அளவிற்றன்றி அதனின் மிகுமாயினும் குறையுமாயினும், நமது பகுதியோடும் காலவியல்போடும், சுவை வீரியங்களாற் றம்முள்ளும் மாறுபடுமாயினும் நோய்க்கு முதலாகும். அதனால் உண்டியின் வகையும் அதனையமைக்குந் திறனும் அதனைப்பழுதுறாது போற்றுமாறும் வல்லராதல் நம்மெல்லார்க்கும் ஒருதலையான் வேண்டப்படும் என்பது சொல்லாமலேயமையும். அங்ஙனமாக, உண்டியமைத்தலே தம்மொரு தொழிலாகவுடைய பெண்களுக்கு அதனுணர்வு ஒன்றாகநல்ல தென்பதற்கு ஐயமுமுளதேயோ?

உண்டிக்கொக்க உயிர் கொண்டுய்த்தற்கு உடையும் ஒருகாரணமேயாம். அது குளிரா

* உழை—பக்கம்,

† மடி—சோம்பல்.

* உணவின் பிண்டம்உண்டிமுதற்றுதலான் உண்டிகொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என மாறிக கூட்டுக. உணவாலுளதாகிய உடம்பு உணவைமுதலாக வுடைத்தது; ஆதலால் உணவுகொடுத்தவர்கள் உயிரைக் கொடுத்தவர்கள் என்பதுபொருள்.

‡ ஒரு தமிழ்ப்புலவரின் பெயர்; புறநானூற்றிற் காண்க.

லும் வெப்பத்தாலு முடம்பு துன்பமுறாதபடி போற்றுகின்றது மன்றித் தோலின்மேல் மற்றொரு ‡மீந்தோல்போல் போர்க்கப்பட்டு நமது உடலிலுள்ள வெப்பம் புறம்போகாதபடி காக்கின்றது. இவ்விரண்டு தொழிற்கும் ஏற்றதகுதியுடைய தன்றி, நமதுடை உடலோடுபொருந்துமிடத்து அதற்குத்தீங்கிழைக்காத பொருளினாலானதாயும், உடலின்தொழிற்பாட்டிற்குச்சிறிதும் இடையூறு விளைக்காததாயும் இருத்தல் வேண்டும். இவ்வியல்புகளிற்குறையுமாயின் உடையும் உடம்பைநோயுறுத்தற் காரணமாகும்.

இளையோரே வளர்ந்து முதியோ ராதலாலும் இளமையிற் பழகிய பழக்கமே முதுமையினும் நிலைபெற்று நிற்றலாலும் நமரெல்லாம் நற்குண நற்செய்கைகளாற் சிறந்து ஓங்கு புகழ் செய்து ஒளி நிறுத்தலை விரும்புவேமாயின் நமதுமக்களை இயல்பினால் வளர்த்தலே நமக்குத்தலையாய தொழில். கரணங்களெல்லாம் நுண்மையவாயிருக்கின்ற குழவிப்பருவம் சார்ந்ததன் தன்மைத்தாய் மாறும் *எண்படதத்ததாதலினாலும், அப்பருவத்திற்குழவிகள் தாமாக ஒன்றை அறியவும் செய்யவும் வல்லனவல்லவாதலாலும், புகுகின்ற முதுமைப் பருவத்தில் நல்லராதலும் அல்லராதலும் அப்பருவத்திலேயே நிச்சயிக்கப்படுதலாலும், குழவிகள் நோயின்றியும், சார்ந்த பொருள்களால் தீங்கடைதலின்றியும் வளர்தற்கு யாம் †கடப்பாடுடையேம். பசுவின்பால் முதலியன நமக்குண்டியாதலின் அவை கேடுறாதவண்ணம் பசுவினை நோயின்றிப்பாதுகாத்தலும், அவற்றின்தொழுவத்தில் நீரும் சாணமும்நின்றுதேக்கி நமதுஇல்லத்தின் தூய்மைக்குக் கேடுவிளைக்காதபடி போற்றுதலும்செய்யத்தக்கன. நமக்குஊர்தியாயுதவும் குதிரை முதலியவும், உழையிருந்துவேண்டு தொழிலியற்றும் வேலையாளரும் பசுவைப் போலவே போற்றப்படவேண்டும். இவைகளிடத்துச்செய்யுங் கடமைகளில் யாஞ்சிறிது குன்றுவேமாயினும் அதனால் நமக்கும் நம்முயற்சிக்குமே துன்பமு மிடையூறும் வந்து நேரும்.

பணத்தைச் செலவழித்தலில் புத்தியாயிருத்தல் யாவர்க்கும் இன்றியமையாதது; வறியராயினும் செல்வராயினும் இயன்றமட்டில் செலவைச் சுருக்கவேண்டும். உயிர் வாழ்விற்கு ஒருதலையான் வேண்டிய பொருள்களெல்லாவற்றையும் வருவாயில் எத்துணைச் சிறிய பொருள்கொண்டு தேடுதல்கூடுமோ அவ்வாறு தேடி, எஞ்சிய பணத்தைப் பிணி மூப்பிற்கென்று சேர்த்துவைத்தல்வேண்டும். யாவரேயாயினும் ஒவ்வொரு பொருளையும் முழுவதும் பயன்படுவித்தலும் ஒன்றையேனும் வீண்படுத்தாமையும் ஒவ்வொருவர்க்கும் கடனாம்.

இதுகாறும் கூறியவாற்றால் இல்லாண்மை, பொதுவகையால் மக்கள்யாவர்க்கும், சிறப்புவகையால் பெண்பாலார்க்கும், பயன்படுநூலாமாறுதெற்றெனப்புலப்படும். அங்ஙனமாகவும், இல்லாண்மையால் யாதுபயன்? இந்நூல் தோன்றுமுன்னர் நம்பெண்பாலார் இல்வினை ஆளும் முறைதெரியாதிருந்தனரோ? இந்நூல் தோன்றிய பின்னர்த்தான் அடிசில் ஆக்கவும் கறியமைக்கவுங்கற்றுக்கொண்டாரோ? எம்மனோரையெல்லாம் குழந்தைப்பருவத்தில் இயல்பாய் வளர்த்துக் கல்வி பயிற்றாது விட்டு விட்டனரோ? என்று வினவுவாருளராயிற் கூறுவாம். இந்த நூல் புதிதாய் உண்டானதொன்றென்றாவது இதுதோன்ற முன்னரே நமது பெண்பாலார் எல்லாம் சமையல் தொழிலினையும், குழந்தைகளை வளர்த்தலையும், பசுக்காத்தலையும், பொருள் செயல் வகையினையும் கைவிட்டிருந்தாரென்றாவது கூறுவாரில்லை. சிற்பநூல்தோன்றமுன்னரே கோயில்கட்டினார்இல்லாது மில்லை; இலக்கண நூல் தோன்ற முன்னரே வழுவின்றிப் பேசுபவரு மெழுதுபவரு மில்லாது மில்லை; அதுபோலவே பாகநூல் தோன்று முன்னர்ச் சமையல் செய்பவரும் பொருணூல் தோன்று முன்னர்ப் பொருள்செய்பவருமில்லாமலில்லை. அவ்வக்காலத்தில் நன்குசமைத்தாரும் நன்றுபொருள் செய்தாருமிருந்தனர். ஆயினும் ஒருதொழிலை நூலுதவியின்றிச் செய்வார்க்கும் நூலுதவிகொண்டுசெய்வார்க்கும் வேற்றுமையுண்டு; நூலின்றித் தொழில் செய்வார் செயல் வரையறைப்பட்டு நின்றுவிடும். நுண்ணிய அறிவும்ஆள்வினை*யுமுடைய ஒருசிறியோர் நூலுதவியின்றியே, அவ்வுதவிபெற்றோரைப் போலத்

‡ மீந்தோல்—மேற்றோல்.
* எண்படதத்து—எளியநிலைமையையுடையது.
† கடப்பாடு—கடமை.

* இடைவிடாதமுயற்சி.

தம அறிவின்வன்மையாலும் பழக்கத்தின்பெருமையாலும் ஒரு சிலவற்றைச் செய்து முடிப்பினும், உலகினுள்பெரும்பாலார்தாம்செய்வதற்கு விதிவிலக்குகளறியவேண்டுபவராயுளர். அத்தகையோர்க்கு இது போன்ற நூல்கள் இன்றியமையாத குறையாயுள்ளன. அன்றி, நூலுதவியின்றித் தொழில் செய்வோர் தாமே யாவுமாராய்ந் தறிந்தோரல்லர்; தொழில் செய்யும் வகைகளையும் அவைக்குவேண்டும் காரணங்களையும் தம்மின் முன்னோரிடத்திருந்து கேட்டறிந்தோரே யாவர். அவருள்ளும் கேட்டபோது முழுப்பொருளையுங் கவர்ந்து கொள்ளாதாரும், கேட்டு மறந்துபோயினரும், கேட்டபோது திரித்துணர்ந்தாரும் பலருளர். ஆதலால் அவர்க்கு மெல்லாம் இந்நூல் பயன்படுவதொன்றேயாம்.

தி. த. கனகசுந்தரம்பிள்ளை.

## நிலவரி செட்டில்மெண்டு.

ஏந்தவழியால் நிலவரி ஏற்படுத்துகிறார்களோ அந்தவழிக்குச் செட்டில்மெண்டெனப் பெயர். அவ்வரி ஏற்படுத்துகிறவர்களுக்குச் செட்டில்மெண்டு உத்தியோகஸ்தர்களென்று பெயர். வரி ஏற்படுத்தும் வழிகளின் உள்விஷயங்கள் ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒவ்வொருவிதமாயிருக்கும். இந்தியாவில் வழங்குகிறபடி, செட்டில்மெண்டு என்ற பதத்தின்மொத்த அர்த்தமியாதென்றால், நிலத்தினின்றும் வரக்கூடிய வரும்படியை செவ்வையாய் அறிந்துகொள்ளப்படுவதென, இந்தியாவில் சில வருடங்களுக்கு முன் இராஜப்பிரதிநிதி சபையில் மெம்பராகவிருந்து இந்தியாவின் சரித்திரத்தை நன்குணர்ந்து இப்பொழுது சீமையிலிருக்கும் ஸர். டபில்யூ ஹண்டர் அவர்கள் எழுதியிருக்கிறார்.

நம் தேசத்திலுள்ள பலதொழிலுடையோருள்ளும் கிருஷித்தொழிலுடையோரின் தொகை மிக்க விசாலித்தது. அரசாங்கத்தோருக்கு நம் தேசத்திலிருந்து வரும் வருமானம் யாவற்றுள்ளும், நிலத்திலிருந்து வருவது மிக்க அதிகமுள்ளது. ஆதலால் இந்துக்களிற் பெரும்பான்மையோருடையவும் அவர்களது பின் சந்ததியோருடையவும் சுகதுக்கங்களும் இலாபநஷ்டங்களும் 'செட்டில்மெண்டால்' முடிவுபெற வேண்டியிருக்கிறது. தஞ்சைஜில்லாவில் செட்டில்மெண்டு வகுப்பாரில் ஒரு வகுப்பார் சிறிதுகாலமாய் வேலை செய்துகொண்டு வருவது யாவரும் அறிவர். அவர்கள் இஜ்ஜில்லாவிற்குச் செய்ய நிர்ணயித்திருக்குந் தீர்மானத்தையும் அதிலுள்ள வித்தியாசத்தையும் எடுத்துத் தர்க்கித்து வரைவதின்முன்னர், 'செட்டில்மெண்டு' நம்மிராஜதானியில் நிலை பெறுவதற் கேற்பட்டுள்ள சரிதத்தை ஒருவாறு சுருக்கி எழுதுகிறேன்.

பூர்வத்தில் நம்முன்னோர்கள் ஒவ்வொரு கிராமத்தையும், கிராமத்தி லுள்ளோருக்குள் பொதுவாக வைத்துக்கொண்டு, அவர்களுக்குள் ஒருவரைத் தலைவராய் ஏற்படுத்திக் கொள்வதுண்டு. ஒரு கிராமத்திலிருந்து அரசனுக்கு வரவேண்டிய இறை முழுவதற்கும் கிராமத்தோர் ஏகமாய்க் கட்டுப்பட் டிருப்பார்களேயன்றி, ஒவ்வொருவருக்குந் தனித்தனி வரி ஏற்பட்டிருக்கமாட்டாது. கிராமத்தலைவன்மாசுலறுவடையானவுடன் அரசிறையைச் செலுத்திவிட்டுப் பிந்தி, கிராமத்தாருக்குள் பங்கிட்டுக் கொடுப்பதுண்டு. அரசனது பகுதியைச் செலுத்திக்கிராமப்பொதுச்செலவுஞ் செய்வதற்கு முந்தி, கிராமத்தின்ஐவேஜியைக்கிராமப் பொது ஐவேஜியாக எண்ணவேண்டுமே ஒழிய ஒருவர் மற்றொருவருக்குத் தெரியாமல் எடுத்துக்கொண்டுபோக வொண்ணாது.

இவ்விதம் அரசிறை செலுத்திக் கொண்டு அவ்வவ்வூர் நியாயங்களை அவ்வவ்வூரிலே கிராமத்தலைவன், கிராமத்துப் பஞ்சாயத்தின் உதவியோடு, சரிவரத் தீர்த்துக்கொண்டு, செழிப்புற வாழும் நாளில் ஆட்டுக்கிடையில் ஓநாயின் கூட்டங்களும், பசுக்கிடையில் வேங்கைப்புலியினங்களும், ஒன்று பத்து நூறு ஆயிரமாய் மேல்விழுந்து கவ்விக் கொலைபுரிதல் ஒக்க, 711-ம் ஆண்டுதொட்டு 1526-ம் ஆண்டுவரையில் அயல்தேசத்து மகம்மதியக் கள்ளர்களும், கொடுங்கோலரசர்களும் நம் தேசத்தின்மீது படையெடுத்துவந்து அழகிய நாடுகளைச் சின்னாபின்னப் படுத்தினர். அவர்களிற் சிலர் பிரஜைகள் இன்புறச் சுகமே வாழச் சகிக்காதவர்களாய், பேராசைபூண்டு, ஒன்று அல்லது பல கிராமங்களைச் சேர்த்து ஒருவனிடத்தி

லொப்புவித்து, இறைவசூல்செய்யும்படி செய்தார்கள். அப்படி வசூல்செய்பவனை ஜமீன்தாரென அழைப்பதாயினர். மேற்கண்ட 800-வருடகாலங்களில் அனேக மகம்மதிய நாட்டரசர்கள் இந்தியாவிற்கு வருவதும், சிலபாகத்தை ஜயிப்பதும், சிலநாள் அரசாள்வதும் பல விடங்களை அக்கினிவாதைகளுக்குள்ளாக்கித் தம்தம் ஜனனநாடேகுவதும், நாடேகுவதற்குமுந்தி, மாற்றரசர், வேற்றரசர் பகைக்குத் தம்மை இரையாக்குவதாயு மிருந்தார்களேயன்றி தேசமுழுவதையும் ஜயித்து இராஜாங்கத்தை நிலைநிறுத்தி, செங்கோல் செலுத்த வேண்டுமென்ற அவாவுடையவர்களாய் இராச்சியபரிபாலனஞ் செய்தார்களென்று சாற்ற, சரித்திரங்களில் ஒருவித ஆதாரமுங் காணேம். நம்முடைய முன்னோர்கள் அரசிறை கொடுத்துவந்த ஏற்பாட்டைப் பலவழியாலுங் கெடுத்ததோடு நில்லாது, தேசத்தில் பூர்வத்திலிருந்த ஏற்பாட்டை யன்றி, வேறு மார்க்கங்களால், வரி வசூல் செய்யலாமென்பதையும், வசூல் பண்ணுபவர்களையும், காளடைவில் நம் நாட்டில் நிலைபெறவும் விட்டு விட்டுப் போயினர்.

இந்த மகம்மதியர்களுக்குப்பின் மூகலாய ரெனப் பெயர் பூண்டுவந்த மகம்மதிய சக்கரவர்த்திகளில் மூன்றாவதான ஆக்பர் நாளில், அவரின்கீழிருந்த இந்துமத மந்திரியாகிய இராஜா தோடர்மால் என்பவரால், தேசமளக்கப்பட்டு, செட்டில்மெண்டு முடிக்கப்பட்டது. அபுல்பாஸி லென்னும் மற்றொரு மந்திரியால் எழுதிய இந்தியா சம்பந்தமான நில அளவு புத்தகத்தை ஆதியாக வைத்துக்கொண்டுதான் அங்கிலேய துரைத்தனத்தார் இந்தியாவை யளக்கப் புறப்பட்டனர். ஆக்பர் நில வரும்படியைப் பலவாறாய் நிதானித்து மூன்றிலொரு கடமை வாங்கிக்கொண்டு வந்தார். இவர் நாளில் பணம் வசூல்செய்வதைச் சிற்றரசர்களுக்குள்ளும், செல்வாக்குள்ள மற்றவர்களுக்குள்ளும், ஒப்புவிப்பதாயினர். இருதிறத்தினரையும் ஜமீன்தாரெனவே அழைப்பதாயினர்.

இந்த 'முகலாய' சக்கிரவர்த்தியின் ஆளுகைக்குப்பின் 200-வருஷங்கள் கழிய, அங்கிலேயநாட்டிலிருந்த ஐக்கிய சங்கத்தோருக்கு இந்தியாவை ஆள்வேண்டிய பாக்கியமும், பொறுப்பும் மேன்மேலு மதிகரிக்க, பூர்வசக்கிரவர்த்திகளுக்குப் பிரஜைகள் எவ்வாறு கிஸ்தி செலுத்தி வந்திருக்கிறார்களென்று விசாரணை செய்யத் தலைப்பட்டனர். 1769-ம் ஆண்டில் அது சம்பந்தமாய் மிகக் கடுமையுள்ள உத்திரவுகள் பல பிறப்பித்தார்கள். கம்பெனி வேலையாளரோ சிற்றரசர்களோடும், மாற்றரசர்களோடும், யுத்தசன்னத்தராய் ஒருபாலும், வியாபாரத்தில் துண்டுவர்த்தகஞ் செய்வதில் ஒருபாலும், சொந்தப்பணத்தை வட்டிக்குக் கொடுப்பதி லொருபாலும், தங்கள் காலத்தைச் செலவழிப்பதில் மிக்க ஊக்கமுள்ளவர்களா யிருந்தார்களே யொழிய, கம்பெனியார் உத்திரவைக் கவனித்து அதற்கேற்க வொன்றுஞ் செய்தார்களில்லை. அதன்பொருட்டே, தேசத்திற் பணம் வசூல்செய்ய முன்வருபவர்களிடத்தில் கம்பெனியார் சாரவேண்டியதாய் விட்டது. குடிகளாவது, கிராமத்தலைவர்களாவது கிஸ்தி செலுத்தும் வலிமையும் நம்பிக்கை யுடைமையும் வாய்ந்தவர்களாய்க் காணப்படவில்லை. முன்வரவுமில்லை. கம்பெனியாருக்கு ஜமீன்தாரர்களைக்கொண்டே பணம் வசூல்செய்வ தவசியமாய்விட்டது. 1793-ம் வருஷத்தில் இந்தியாவின் இராஜப்பிரதிநிதியாயிருந்த 'காரன்வாலிஸ் பிரபு' பெங்காளத்தில் பெரும்பாலும் ஜமீன்தாரர்களைக் கொண்டே இறைவாங்கும்படி ஏற்பாடுசெய்து செட்டில்மெண்டு முடித்துவிட்டார்.

இந்த ஜமீன் ஏற்பாடு, நடக்கும் நூற்றாண்டின் துவக்கத்தில் நமது இராஜதானியிலும் சிலகாலம் அனுஷ்டானத்திலிருந்தது. 1799-ம் ஆண்டில் சீரங்கபட்டணம்யுத்தகளத்தில் 'டிப்பு சுல்தான்' மாளவும் மைசூர் இராஜ்ஜியம் இப்பொழுது இருக்கிறது போக, பாக்கி மகாராஷ்டிரர், நிஜாம், அங்கிலேயர் மூவரும் பங்கிட்டுக்கொண்ட சில காலத்திற்குள் ஆற்காட்டின் நவாப்பினது நாடுகளாகிய கர்நாடக இராஜாங்கமும், தஞ்சைசமஸ்தானமும் அங்கிலேயராளுகையில் வந்துவிட்டன. அதாவது இப்பொழுது இருக்கும் சென்னை இராஜதானிமுழுவதுமென்றே சொல்லவேண்டும். இந்த இராஜதானியில் நிலவரிவசூல் செய்வதெப்படி என்பத்து சீமையில் வர்த்தகச்சங்கமெம்பர்க ளொவ்[illegible] வா

ருவர். யோஜனைக்கு மெட்டியது. அவர்களுக்கு பங்காளத்தில் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்திருக்கிற ஜமீன் ஏற்பாட்டின்படி வரிவசூல் செய்வதே நலமெனத்தோன்றி அவ்வாறே சென்னையிலுஞ் செய்யும்படி அந்தராஜாங்கத்தாருக்குத் தெரிவித்தனர். சென்னைராஜதானியில் நல்ல ஜமீன்கள் கிடையாவென்பது நம்மவர்கட்கு நன்றாய்த் தெரியும். இராஜாங்கத்தார் ஜமீனுள்ள விடங்களில் ஜமீன்களுக்குள்ளும் இல்லாவிடங்களில் நூதனமாய்ச் சிலரை நியமனஞ்செய்து, அவர்களின்கீழ் ஒன்றல்லது பல கிராமங்களை உட்படுத்தியும், வரிவாங்க எத்தனித்தனர். ஆதிமுதல் ஜமீனையுள்ளவர்கள் தங்கள் கடமையைச் சரிவரப் புரிந்தனர். புதிதாய் ஏற்படுத்தப்பட்டவர்கள் வேலைக்கு முற்றிலும் அநருகர்களாய்க் காணப்பட்டார்கள். இராஜவருமானம் மிகவும் பாக்கிவிழ ஆரம்பித்தது. அரசிறை மந்திரிகளுக்கு வேறு எவ்வழியானும், வரி வசூல்செய்வ தவசியமெனத் தோன்ற நேர்ந்தது.

1800-ம் வருஷத் துவக்கத்தில் சிற்சிலவிடங்களில் 'ரயித்துவாரி' ஏற்பாட்டை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்து விட்டார்கள். சென்னபட்டணத்தில், சிறந்த கல்லில் மேம்பாடு பெற வேலைசெய்துள்ள, சிரேஷ்ட ரொருவர் அழகமைந்த அசுவத்தின்மீது வீற்றிருக்கக் காண்கின்றோமன்றோ? அவர் சென்னையில் கவர்னராயிருந்த 'ஸர். தாமஸ் மன்ரோ' வென்று நமக்கு நன்றாய்த் தெரியுமே. இவர்தான் 1820ம் ஆண்டில் 'ரயித்துவாரி' ஏற்பாடு இராஜதானி முழுதும், நிலைபெறுதற்குண்டான முயற்சிசெய்தவர். அது அவ்வாறே அனுஷ்டானத்திற்கு வந்துவிட்டது. ரயித்துவரி ஏற்பாடின்னதென்று கவர்ன்மெண்டார் சொல்வதைவிட நான் தெளிவாக எழுதப்போவதில்லை. அதனால் "ஒவ்வொரு பட்டாதாரனும் பூமிக்குச் சுதந்தரமுள்ளவனாவதோடு, சர்க்காருக்குக் கிஸ்தி நேரில் செலுத்துகிறவனாகிறான். அவனது நிலங்களை உட்குத்தகை விடவும், சீதனமாய்க் கொடுக்கவும், பெந்தகம்வைக்கவும், சுத்தக்கிரயசாஸன மூலமாய் விற்கவும், அதிகாரமுண்டாகிறது. அவனுக்கு ஏற்பட்டவரியை அவன்செலுத்துமளவும் பூமியைவிட்டு ஏகச்சொல்ல இராஜாங்கத்தாருக் கதிகாரமில்லை. அவன் வருஷந்தோறும் தன்நிலங்களை அதிகரிக்கவும், குறைக்கவும் இஷ்டமுண்டானால் நிலத்தைத் தரிசு போட்டுப் புறம்பே போகவுமிடங்கொடுக்கிறது. காலநிலைபோதாத காலத்தில் முழுவதிற்காகிலும், ஒருபாகத்திற்காகிலும் கிஸ்திலய ரிமிஷன் செய்துகொடுக்க, அதாவது வரியைத் தள்ளிக் கொடுக்க, அரசாங்கத்தார் கடமைபூண்டிருக்கின்றார்கள். வரியைத் தானியமா யில்லாமல் பணமாக ஏற்படுத்தியதோடு நில்லாது அவர்கள் நினைத்தவாறு உயர்த்த வேனுந் தணிக்க வேனும் இடங்கொடுக்கவில்லை. ஆனால் புஞ்செயை நஞ்செயாக்குவதற்கும் ஒருபோகம் விளையும் நிலத்தை இருபோகமாக்குவதற்கும் தண்ணீர்த் தீர்வைபோடலாம். மிராசுடையோர் சுயமே பாடுபட்டு செய்நேர்த்தி செய்துவிளையும் அதிகவிளைவை இராஜாங்கத்தோர்கவனிக்கவேகூடாது" இந்த ரயித்துவாரி ஏற்பட்டால் கவர்ன்மெண்டார், ஜனங்களுக்குக்கொடுத்திருப்பதாக வரையும் சுதந்தரங்களும் பாத்தியங்களும் சென்னைவாசிகளுக்கு உண்மையில் அங்கிலேயராலளிக்கப்பட்டனவா? அல்லது நிலத்தில் பாடுபடுவோர் தொண்டுதொட்டு, புத்திர பவுத்திர பரம்பரையாய்ஆண்டனுபவித்து வந்தனவா? வென்பதை, விவரித்து இங்குயான் நீள நினைந்து எழுதப் போவதில்லை.

இப்படி ஒரு ஏற்பாட்டால் இராஜதானிமுழுவதும் வரிவசூல்செய்ய, ஆலோசனை சபையிலுள்ள சென்னைக்கவர்ன்மெண்டார் தீர்மானித்தும், அவர்களெண்ணம் முற்றிலும் நிறைவேறவில்லையென்பதுநம்மிராஜதானியில் தற்காலம் ஒன்றல்லது இரண்டுஜில்லாக்களின் இறைகொள்ளும் ஏற்பாடு ஒன்றிற்கொன்று மாறுபட்டிருப்பதையும், நிலவரியைப் பல வழியால் வசூல் செய்துகொண்டு வருவதையும் நோக்கின் நன்குற விளங்கும். இப்பொழுது ஒவ்வொரு ஜில்லாவின் இறைகொள்ளும் வழியை எடுத்தெழுதுவதாக உத்தேசமில்லை. தஞ்சை ஜில்லாவின் ஏற்பாட்டைச் சொல்லிவிட்டால் போதுமானது. தஞ்சை ஜில்லாவிலுள்ளோர் தற்காலம் அரசிறை செலுத்தும் விதந்தான் 'மொத்தம் பைசல்' எனப் பெரும்பான்மையோருக்கு நன்றாய்த்தெரியும். இந்தமொத்தம் பை

சலுக்கு முந்தியிருந்ததற்கு 'ஒழுங்கேற்பாடு' எனப்பெயர். அதை எவ்வாறு ஜில்லாவில் பரவ விட்டார்களென்றால்:—ஒவ்வொரு கிராமத்திற்கும் விளையக்கூடிய நெல்லிவ்வளவென்று அறிந்துகொள்ள அமானியில் கண்டு முதலான நெல் தொகையையும் முந்திய இராஜாக்கள் நாட்களிற் கண்டு முதலான நெல் தொகையையும் ஒப்புநோக்கி ஒருவித முடிவிற்கு வந்து, அந்த முடிவாகத் தீர்மானஞ்செய்த நெல்லினின்றும், கிராமச் செலவு நீக்கி, பாக்கியுள்ளவற்றில் அருவி பாய் நிலங்களுக்கு 100 - க்கு 50 வீதமும், மானவாரி நிலங்களுக்கு 100 - க்கு 55 வீதமும், மிராசுவாரம் நீக்கிப்பாக்கியுள்ளவற்றையும், கிராமாதிகாரிகளுக்கு ஏற்பட்ட சுதந்தரத்தையும் கூட்டி, கவர்ன்மெண்டார் வாங்குவதானார்கள். இந்தத் தீர்வையை நெல்லாக வசூல்செய்வதில்லை. ஒவ்வொரு மாகாணத்திலும் விற்றிருக்கும் ஐந்துவருஷ தானிய விலைச் சராசரியை யெடுத்துக்கொண்டு, ஜமாபந்தி காலத்தில் விற்கிறவிலை ஷைவிலைக்கு 100 க்கு 10 அதிகமிருந்தால், அதைச் சேர்த்துக் கொண்டும், 100க்கு 5 கம்மியாயிருந்தால் சராசரி விலையினின்றுங் குறைத்துக் கொண்டும் அந்த விலைப்படியுள்ள பணத்தை வசூல்செய்வதானார்கள்.

மொத்தம் பைசலால் தஞ்சைஜில்லாவிற்கு விதிக்கப்பட்டிருக்கிற வரியைவிட அதிகப்படுத்துவது, இராஜாங்கத் தாருக்குப் பிந்தி அலட்டையும், நஷ்டத்தையும்-பெண்டுபிள்ளைகள் குழந்தை குட்டிகள் உற்றார் உறவினர் மற்றுமுள்ளோருடனும், நெற்றிவியர்வை நிலத்திற் சொட்டச்சொட்ட, அல்லும் பகலும் ஊணுறக்கமின்றி, தங்கள் செயலாற் றடுக்க வொண்ணாத ஆற்றுவெள்ளம், மழைவெள்ளம், காலந்தப்பி வீசுங்காற்று, அதிகக்காற்று, ஜல அருந்தல்போன்ற பல விஷயங்களைக் கருதிக்கருதி, பூரண கர்ப்பிணியைப் பாது காப்பதுபோல் வேறு வேலைகளில் மனதைச் செல்லவிடாது, ஒரே கவலையாய்த் தங்கள் நெல்விளைவு கழனிகளைப் புரக்கும், அனேக இலட்சம் பிரஜைகளின், வாணாளைக்குன்றச்செய்து நித்திய தரித்திரர்களாய் ஆக்குவதற்கு மார்க்கத்தையும் விளைப்பதாய் முடியுமே யொழிய, காருண்ய மகாராணி மனப்பூர்வ தயாளசிந்தையின். பலனைக் கிருஷித் தொழிலுடையோ ரடைவார்களென்பதற்கு எட்டுணை யேனுமிடமில்லை. இது என்னுடைய சொந்த அபிப்பிராயமட்டுமென்று. சென்னையில் மிகத் திறமை வாய்ந்து இராஜ்ஜிய பரிபாலனஞ்செய்த, 'ஸர் சார்லஸ் டிரிவிலியன்' இராஜ்ஜிய பரிபாலனக் கொள்கையை நன்குற வுணர்ந்த சமர்த்தர். அவர் அன்று சாற்றிய மொழி யாதோ வென்றால், "தஞ்சை ஜில்லாவில் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்திருக்கிற உன்னத செட்டில்மேண்டைக் கெடுப்பது, எவ்வழியாய்ப் பார்ப்பினுந் தப்பென்றே தீர்மானிக்கவேண்டும். அதாவது, பொன்முட்டையிடுகிற வாத்தைக் கொலைபுரிந்து (ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்றாய் எடுப்பதைவிட, ஒரேநாளில் ஏகமாய் எல்லாவற்றையும் எடுப்ப தொக்க) முட்டைபெற வுத்தேசிப்பதாகும். ஏனெனில், இடைவிடாத உழைப்பினுடையவும், முதலாகப் போட்ட ஏராளமான திரவியத்தினுடையவும் பயனாகிய பணத்தின் பெரும்பாகத்தை ஸர்க்கார் பொக்கிஷத்திற்குச் சேர்க்க அடிக்கடி செய்யும் செட்டில்மேண்டுவேலை, இன்னுமொரு ஐம்பது வருடத்திற்கு அவர்கள் பயப்படவும் நிலத்தில் நம்பிக்கை வைக்காமலிருக்கவும் தகுந்தகாரணமாயிருக்கிறது. என்னுடைய அபிப்பிராயம் தஞ்சாவூருக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கிற தீர்வையே போதுமானதென்பதுதான்." இவ்வாறு புகழப்படும் 'மொத்தம்பைசல்' 1830ம் ஆண்டில் ஜில்லாவின் சில பாகங்களில் மட்டுமிருந்தது. 1859ம் ஆண்டில் ஒழுங்கேற்பாட்டை மாற்றி ஜில்லா முழுவதிற்கும் ஏற்படுத்தி விட்டார்கள். அப்பொழுது ஜனங்களுக்கு மிகக் கஷ்டமாயும், அந்த ஏற்பாட்டின் கீழ் மிராசுடைமை அதிக வருத்தமுள்ளதாயுங் காணப்பட்டது. அன்று ஜில்லா கலெக்ட்டரா யிருந்த 'கிண்டர்ஸ்லி'யின் பேரைக் கேட்டா லழுதபிள்ளை வாய்மூடுமென்பது உண்மையைவிட அதிகமாகக் காணப்படினும் ஒருவாறு வாஸ்தவமே. ஜனங்களோ மாரியம்மன் காளியம்மன்களை எவ்வாறு பூஜித்து நடுங்குவரோ, அவ்வாறே, கிண்டர்ஸ்லியின் பெயருக்கு நடுக்கமுற்றனர். ஆனால் பிந்தி கவர்ன்மெண்டார், ஆறு, ஏரிகளிற்கட்டிய அணைகளாலும், வலைபோல் பின்னிய ரஸ்தாக்களாலும், ரெயில் முதலியதுகளாலும், நிலங்களின் வரும்படி முற்றிலும் முழுமோசமாய்ப் போய்க் குறை

ந்துபோகாமல், தானியவிலை முன்னைவிட அதி
கமாய் விற்றுக்கொண்டு வந்தபடியால், மிராசு
டையோர் பலரும், பெருங்கடனாளிகளாயிருந்
தும், முன்னளவு கஷ்டமில்லாமலிருந்து கொ
ண்டிருக்கிறார்கள். அனேக விடங்களில் வருத்
தம் நிவர்த்தியாகாமலு மிருந்து கொண்டிருக்
கிறது. 'கிண்டர்ஸ்லி'யின் பெயர், தற்காலம்
கெட்டிக்காரனுக் குபயோகப் படுத்துகிறார்
கள், இவன் 'கிண்டர்ஸ்லி'யென்றால் ஒவ்வொ
ன்றின் பகுப்பையும் நன்றாய் அறியக்கூடிய
சமர்த்தனென்றாகும். அவர்நாளில்முந்தி சாகு
படி செய்யப்பட்ட நிலங்களையும், மொத்தம்
பைசலனுஷ்டானத்திற்கு வருகிற காலத்தில்
சாகுபடி செய்யப்பட்ட நிலங்களையும் ஒத்துப்
பார்த்தார்கள். ஒவ்வொரு கிராமத்தின் விளை
வையும் அவைகளினடுத்த கிராமங்களின்
விளைவையும் ஒத்துப்பார்த்தார்கள். 'ஒழுங்கு'
ஏற்பாட்டின் தானிய விளைவு சராசரிபோடுவ
தற்கு முன்னர் அமானியிலிருந்த நிலங்களினி
ன்றும் சுபிக்ஷ காலத்தில் விளைந்த நெல்தொ
கையையும், கெடுதற் காலத்தா லுண்டாகிய
பஞ்ச விளைவையும், நன்றாய் மனதிற்கு வா
ங்கினார்கள். அமானியிலிருந்த நிலங்களின்
கண்டுமுதல் சராசரியை மிகக் கவனித்தார்
கள். கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களு
டையவும், பென்ஷன்வாங்கிய அனுபவ முதிர்
ந்தவர்களுடையவும், அபிப்பிராயங்களை அவர்
களுக்குச்சுயமேதெரிந்தவிடங்களுக்கும், கேள்
வியாலறிந்துகொண்ட விடங்களுக்கும், வாங்
கினார்கள். மிராசுதார்களைத்தனித்தனியும் ஒரு
இடத்தில் கூட்டியும் வேண்டியமட்டில் விஷ
யங்களைத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.
இவ்விதமாகப் பலவாறாய் விஷயங்களைச் செவ்
வையா யறிந்துகொண்ட பின்னர் தான் 'மொ
த்தம் பைசல்' செய்தார்கள்.

இது ஒருபால் நிற்க, 1855-ஷுல்சென்னைக்
கவர்ன்மெண்டாருக்கு அனுஷ்டானத்திலிருக்
கிற செட்டில்மெண்டுக்கு முந்தி, நடக்கும் பத்
தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் நில
மளந்த கணக்கும் வரும்படிக் கணக்கும், கர்
ணன் முதலியவர்களால் முடித்தவைகளா யிரு
ப்பதால், அவநம்பிக்கை யுண்டாக்கத் தலைப்
பட்டன. உடனே சீமையிலுள்ள வர்த்தக சங்
கத்தாருக்கு இராஜதானியில்செட்டில்மெண்டு
செய்யவேண்டுமென்று எழுதினார்கள். 1851-ம்
வருஷத்தில் அவர்களும் ஒப்புக்கொண்டு அவ்
வாறேசெய்ய உத்திரவுசெய்து விட்டார்கள்.
அதன்பேரில் தான் 1858-ம் ஆண்டில் 'சர்வே
டிபார்ட்டுமெண்டு' ஏற்பட்டது. அது முதல்
அவர்கள், ஒவ்வொரு ஜில்லாவாக முன்னே
அளந்து கணக்குத் தயார்செய்து கொண்டு
போகிறார்கள். அவர்களைத் தொடர்ந்து பின்
னே 'செட்டில்மெண்டு' உத்தியோகஸ்தர்கள்
செட்டில்மெண்டு செய்துகொண்டு போகிறார்
கள். சர்வே டிபார்ட்டுமெண்டையும், செட்
டில்மெண்டு டிபார்ட்டுமெண்டையும் ஏற்படு
த்தியதின் நோக்கத்தையும் உத்தேசத்தையும்
பற்றி, சென்னைக்கவர்ன்மெண்டார் என்ன வெ
ளியிட்டிருக்கின்றன ரென்றறிந்துகொள்வ தவ
சியம். அவர்கள்வரைவதாவது:—"ஒவ்வொரு
வருக்குந் தாங்கள் செலுத்தவேண்டிய கிஸ்தி
இன்னதென்று நிச்சயப்பட்டுப்போய் விடும்.
ஏமாற்றியாவது இலஞ்சங் கொடுத்தாவது ரிமி
ஷன்கள் கவரன்மெண்டாரிடத்திலிருந்து, பயி
ர்த்தொழி லுடையோர் பெற இடமில்லாமற்
போய்விடும். ஆகையால் கெஞ்சிக் கூத்தாடி
யாவது இலஞ்சங் கொடுத்தாவது ரிமிஷன்
செய்துகொள்ளலாமென்ற வெண்ணம் ஜனங்
களிடத்திலிருந்தும், ஏராளமானபணத்தைஜன
ங்களிடத்திலிருந்து வாங்கலா மென்ற வெண்
ணம் உத்தியோகஸ்தர்களிடத்தி லிருந்தும்,
விட்டு நாளுக்குநாள் அகன்றிடவு மிட முண்டா
கும். அப்பொழுது மிராசுதாரர்கள் ஒரு வி
தக் கஷ்டமுமின்றி அதிகத்தொகை சர்க்காரு
க்குக் கொடுக்க இடமுண்டாகும். கவர்ன்மெ
ண்டு உத்தியோகஸ்தர்களிற் பலருக்கு இலஞ்ச
மாய்க்கொடுக்குந் தொகையினின்றும், ஜனங்
களை மீட்பதோடில்லாமல், கவர்ன்மெண்டை
ஏமாற்றிச் சொற்பவரி செலுத்துபவர்களுக்கு
அதிகக் கிஸ்தி செலுத்தும்படியும், அநீதமாய்
அதிகவரி செலுத்திக்கொண்டு வருபவர்களு
க்குக் குறைத்துச் செலுத்தும்படி செய்யவும்
ஏற்பட்டுப்போய் விடும். இம்மட்டோ? அதிக
கம்மியும் அதிக ஜாஸ்தியு மில்லாமல், நிதா
னத் தீர்வை, அடிக்கடி (புது செட்டில்மெண்
டால்) மாறாமல், சாசுவதமாய் ஏற்படும் பொ

மூது, நிலத்தில் மிராசுதார்களுக்கு அதிக மோகமுண்டாகும். தற்காலம் கிருஷித்தொழில் மிகவும் ஈனஸ்திதியிலிருந்துகொண்டிருக்கிறது. நேராகவும், சார்பாகவும் பற்பலவரிகள் நிலத்தின்மேல் போடப்பட்டிருக்கின்றன. இத்தகையதிங்கினின்றும் நிலத்தைத் தப்பித்து விடும்பொழுது, மிராசுடையோர் மாத்திரமன்று, மற்றும் பணமுடைய பல்லோரும் தங்கள் திரவியத்தை நிலத்தில் போடவுந்தானே தூண்டுதல் உண்டாகும். மேலுமதிகத் தீர்வையுந் தப்பான கணக்கும் சாகுபடியில் பொய்க்கணக்குக்கொடுக்க அதிகவிடங் கொடுக்கின்றன. இவ்வித மோசம் அதிகமாய்த் தேசத்திலிருப்பது அடிக்கடி தகவலுக்கு வந்திருக்கிறது. இலஞ்சம் வாங்குகிற கீழ் உத்தியோகஸ்தர்களினுதவியாலே இவ்வாறுநடந்துகொண்டு வருகிறதென்பது ரிவினியூ உத்தியோகஸ்தர்களுக்கு நன்ருய்த்தெரியும். வரியைக் குறைத்து விட்டால் சர்க்கார்ப்பணத்தை ஏமாற்றுவதற்கு அவ்வளவு இடங்கொடுக்காது. ஏனெனில் உத்தியோகஸ்தர்களுக்கு இலஞ்சங்கொடுக்கத்தூண்டுதலில்லாமற்போய் விடுமன்றோ. தப்பில்லாமலளந்து தெளிவுறவும் சுலபமாயும் கணக்கு ஏற்படுத்திவிடின், மோசஞ்செய்வதற்கு முடியாதகாரியமாய்ப் போய்விடும். அன்றி ஒருவிசை செய்துவிட்டால் ஆபத்தாய் முடியும்.

"ரஸ்தாக்களும் தேசத்திற்கு இன்னும் வேண்டிய சௌகரியங்களும் நாளுக்குநாளதிகரித்துப்பரவவும், தங்கள்ஜனனநாட்டைத் துறந்து கடல் கடந்து அயல்தேசம்போக என்றும் விருப்புடையோ ரல்லராயிருந்தும், தரித்திரத்தினிமித்தமும், வேலை யகப்படாததினிமித்தமும், கடல்கடக்கும்படி நேரிடுகிற சாந்தமும் ஸாத்விககுணமும் பொருந்தி, மிக்க உழைப்பாளிகளாயுமுள்ள, ஜனங்களால், சாகுபடிக்கு வராத அனேக தரிசு நிலங்களுள்ள இச்சென்னைஇராஜதானியில், விவசாயத்தொழில் விர்த்திக்கு வரும்படியாகத் தணிந்த தீர்வையை ஏற்படுத்தி விட்டால், அனேகநிலங்கள் சாகுபடிக்கு வந்துவிடுமென்பதில் யாதொரு சந்தேகமில்லை. இப்பொழுது அனேக நிலங்களுக்கு சரிவரக் கிஸ்தி செலுத்தாமலே கவர்ன்மெண்டை ஏமாற்றிக்கொண்டு வருகிறார்கள். அந்த நிலங்களுக்குக் கிரமமான தீர்வையை ஏற்படுத்த வேண்டுமென்பது இந்த செட்டில்மெண்டின் நோக்கங்களிலொன்று. உத்தேசப்படி செட்டில்மெண்டு செய்வதானுலதிககாலம் பிடிக்கும். சர்வே அளவும் செட்டில்மெண்டும் இந்த இராஜதானிக்குச் செய்துமுடிக்க 15-அல்லது 20-வருடங்களுக்குக் குறையா. ஒவ்வொரு வருஷத்திலும் இராஜதானியின் வரும்படியில் 15-அல்லது 20-ல் ஒருபாகந்தான் சீர்திருத்தப்பட்டு வரும். இப்பொழுது இராஜதானியிருக்குங் கெட்ட நிலைமையை யோசிக்குங்கால் புது செட்டில்மெண்டால் இராஜாங்கத்தின் வரும்படி அதிகரிக்குமே யொழிய குறையாது. ஜனங்களுக்கோ லாபம்மிகப்பெருகும். ஸர்க்காரிறையோ இப்பொழுதை விட இரண்டல்லது மூன்று பங்கு அதிகரிக்கும். ஜனங்களோ, கஷ்டமில்லாமலும் வருத்த மில்லாமலும் தம்தம் வரியைச்சுலபமாய்க் கொடுக்கப் பிரியப்படுவார்கள்."

இத்தகைய கவர்ன்மெண்டாரது அபிப்பிராயத்தையும், ஸர். சார்ல்ஸ்டிரிவிலியன் துரையவர்களது தீர்மானத்தையுங் கலந்து செய்யும் ஏற்பாடே தஞ்சைக்குப் பொருந்தியதென்று நிச்சயமாய்க் கூறலாம். அதாவது புதுசர்வே அளவும், அனுஷ்டானத்திலிருக்கிற மொத்தம் பைசலால் ஏற்பட்டிருக்கிற தீர்வையுமே இராஜாங்கத் தாருக்கும் பிரஜைகளுக்கும் ஏற்ற செட்டில்மெண்டாகும்.

கோட்டேர் ஜி. ஸ்ரீநிவாச முதலியார்.

## மாதர் மஞ்சரி.

## II. சகோதரி டோரா சரித்திரம்.

"அன்பிலாரெல்லாந் தமக்குரியர்; அன்புடையார் என்பு முரியர் பிறர்க்கு.*"—குறள்.

சரீரபலத்தையே நீதியாகக்கொண்டு, பிறர் தம்மாற்படுங் கஷ்டங்களைப்பற்றிச் சிறிதும் நினையாமல், தத்தம் நயத்தையுஞ் சுகத்தையுமேகருதிமுடித்தல், மிருகசாதிகளுக்குள் இயல்

* "அன்பிலாதார் பிறர்க்குப் பயன் படாமையின் எல்லாப் பொருளானுந் தமக்கே யுரியர்; அன்புடையார் அவற்றானே யன்றித் தம்முடம்பானும் பிறர்க்குரியர்" பரிமேலழகர்.

பாயிருக்கின்றது. நரி தன் கலியாண முழக்கத்தில் நண்டின் பிராணாவஸ்தையைப் பற்றிச் சிறிதும் நினைக்கிறதில்லை; அதுபோலவே வேட்டை முழக்கத்தில், நாய், நரியின் கஷ்டங்களுக்கு இரங்குகிறதுமில்லை. ஆனால் நாகரீகமுள்ள மனிதனோ சுயநயத்தோடு பிறர் நயத்தையும் பாராட்டு மியல்பினனா யிருக்கின்றானாயினும், உற்றுப்பார்க்கின் சுயநயத்தின்பொருட்டே பிறர்நயத்தைப் பாராட்டுகின்றானென்று கூறுவர் சிலர். இது பெரும்பாலும் மெய்யே.

"தருமம் தானம் என்று உலகு அறியுங்
கருமம் அனைத்துஞ், செய்பவன் கருத்தைக்
காணின், நாணமாம். அவரவர் தனக்கா
எண்ணிய எண்ணம் ஏய்துவான், பலவும்
பண்ணுவர் புண்ணியம்போல. எல்லாந்
தன்னயங் கருதியன்றித், தனைப்போற்
பின்னொருவனை யெணிப்பேணுவ ருளரோ"*

இக்கொள்கையுடைய சிலர், முற்றிலும் பரோபகாரமாகவே செய்யப்படுஞ் செய்கைகளையுங் கூடச் செய்பவர்களுக் குண்டாகும் சந்தோஷமாகிய சுயநயத்தின் பொருட்டே செய்யப்பட்டனவெனக் கூறுவர். அப்படியாகின், பிறர் சந்தோஷத்தைத் தானும் மனங்குளிர அனுபவித்துப், பிறர் கஷ்டங்களின் பொருட்டுத் தானும் வருந்தி யுழைத்தலே, பரோபகாரத்தின் பண்பாம். அதுவே மனிதர்களுக்கும் மிருகங்களுக்கு முள்ள முக்கிய பேதமாம். தன்னயத்தை மட்டுங் கருதுவோனை மிருகங்களுக்கு மேலாகக் கூறுதல் தப்பன்றோ? இச் சரித்திரம் பரோபகாரிகளிற் சிறந்த ஓர் பெருமாட்டியைப் பற்றியது.

டோரா பாட்டிஸன் என்னும் பெருமாட்டி இங்கிலாந்து தேசத்தில் 'யாற்க்' மாகாணத்தில் 1832-ம் வருஷத்திற் பிறந்தாள். அவள் உயர்ந்த வம்சத்தினள்; சிறந்த கல்விப்பயிற்சியுடையவள்; அழகும் நற்குணமும் மிகுந்தவள்; வேட்டை முதலிய விளையாட்டுகளில் விருப்பமுடையவள்; உல்லாச மனத்தினள்; தன்னிஷ்டப்படி நடக்க இச்சையுள்ளவள். கடைசியிற் கூறின குணத்தினால் விளைந்த நன்மைகளையுந் தீங்குகளையும் இச்சரித்திரத்தில் அறிந்து கொள்ளலாம்.

* மனோன்மணியம் I, 5, 84-90.



டோரா 1856-ம் வருஷத்தில், பிளாரன்ஸ் நைட்டிங்கேல் என்னும் பெருமாட்டி கிரிமியா யுத்தத்திற் காயப்பட்ட வீரர்களைச் சௌக்கியப்படுத்த வுழைக்கும் உழைப்பைப் பற்றிக் கேள்வி யுற்றுத் தானும் வெளியே சென்று பரோபகாரமா யுழைக்க வேண்டுமென்று விரும்பினாள். ஆனால் அவளுடைய தாய் தந்தையர்கள் அதைத் தடுத்து விட்டார்கள். அது முதல் டோரா தன் வீட்டில் வீண்பொழுது போக்குவதை வெறுத்து, வெளியே போகச் சமயம்பார்த்துக் கொண்டிருந்தாள். சில வருஷங்களாக இதைப்பற்றித் தன் தகப்பனோடு வாதாடி முறண்டிப், பின்பு 1861-ம் வருஷத்தில் அவர்சொல்லைமீறிக்கொண்டு வீட்டை விட்டுப்போய் விட்டாள். போகவே, அவர் அதுவரையும் உடுப்புகளுக்காகவும் கைப்பணமாகவுங் கொடுத்துவந்த சொற்ப திரவியத்தை மாத்திரம் கொடுத்துக்கொண்டு வந்தார். சாப்பாடு வீட்டு வாடகைமுதலிய செலவுகளுக்குப் பணம் மறுத்து விட்டார். டோரா அதன் பேரில், உல்ஸ்டன் என்னுங் கிராமத்தில், ஓர் சிறு குடிசையை யமர்த்திக்கொண்டு ஒரு வேலைக்காரிகூட வில்லாமல், மூன்று வருஷங்களாய்ப் பள்ளிக்கூடம் வைத்து ஜீவனஞ் செய்து கொண்டு வந்தாள். அவளிடத்திற் கல்விகற்ற குழந்தைகளெல்லாம் அவள் சொற்படியே நடந்தன. அவள் அன்பு அவ்வளவு சக்தியுள்ளது. அவ்விடத்திலுங்கூடத் தன் பள்ளிக்குழந்தைகளின் சுற்றத்தார் யாராவது பிணிகளால் வருத்தப்பட்டபொழுது, தான் அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகள் செய்து வந்தாள். சுற்றுமுள்ள ஜனங்களெல்லாம் அவள்உயர்ந்த குணமுள்ள சீமாட்டியென்று அறிந்துகொண்டபோதிலும், அவள்தன் வீட்டுவேலைகளை யெல்லாந் தானேசெய்து கொள்வதைக்கண்டு ஆச்சரியப்பட்டார்கள். கற்றுணர்ந்த பெருமாட்டிகள் வேலை செய்வது இழிவல்லவென்பது அவர்கள் புத்திக்குப் புலப்பட வில்லை. சுத்தத்தையும் ஒழுங்கையும் விளக்கும் வேலைகளைப் பார்க்கிலும், அழுக்கும் ஒழுங்குத் தப்பும், "பெருமாட்டி" என்ற பெயருக்குப் பாத்திர முள்ளமாதின் மனதைப், பதின்மடங்கு வருத்துகின்றன.

டோரா தன் மனம்போன போக்கெல்லாம் போக விருப்ப முடையவளென்று கூறினோம். தான் மிகவும் நேசித்த தகப்பனாரை மீறிநடந்த மனது யாருக்கு அடங்கும். தானாகவே வர வர அடக்கிக்கொள்ள வேண்டியதைத் தவிர வேறு வழியில்லை. அப்படியிருந்தும் அவள் ஒரு "சகோதரிகள் கூட்டத்திற்" சேர்ந்தாள். இப்படிப்பட்ட சங்கங்கள் இத்தேசத்திற்கிடையா. இங்கிலாந்து முதலிய சில தேசங்களில், ஒரேமதக் கொள்கைகளுள்ள சில பெண்பிள்ளைகள், பரோபகாரமா யுழைக்கும் பொருட்டு, ஓர்சங்கம் ஏற்படுத்திக் கொண்டு தங்களுக்குள்ளேயே அதிகாரிகளை நியமித் தானபின், அவ்வதிகாரிகள் கட்டளைகளையே வேதவாக்காகக்கொண்டு அச்சங்கத்து மாதர்கள் நடப்பார்கள்*. என்ன காரணமிருந்தபோதிலும் கட்டளைகளைச் சிறிதும் மீறக்கூடாது. இவ்வழக்கம் வருவதற்காகச் சோதனைகள் செய்வதுண்டு. ஒருநாள் "சகோதரி" டோரா சங்கத்துமாதர்களுக் கெல்லாம் படுக்கைகள் போட்டாள். உடனே ஒரு "சகோதரி" மேலதிகாரியின் உத்தரவின்படி படுக்கைகளை யெல்லாங் குலைத்துவிட்டு, டோராவை மறுபடியும் படுக்கைபோடும்படி கட்டளையிட்டாள். புதிதாய்ச் சேர்ந்த "சகோதரி" யொருத்தி வீடெல்லாந் துப்பரவு செய்தானபின், மற்றொருத்தி மேலதிகாரியின் கட்டளைப்படி மண்ணையுஞ் சாம்பலையுங் கொண்டுவந்து சிதறுவாள். புதுச் "சகோதரி" சிறிதும் முறுமுறுக்காமல் மறுபடியுஞ் சுத்திசெய்யவேண்டும். இவ்விதக் கட்டளைகளாலுண்டாகும்நன்மைகளைப்பார்க்கிலுந்தீங்குகள் மிகுதியானவையென்று யோசிப்போருக்குத்தெரியவரும்.

1865-ம் வருஷத்தில் சங்கத்தார் அவளை 'வால்ஸால்' என்னுங் கிராமத்து 'ஆசுபத்திரி' யில் பணிவிடைகள் செய்யும்படி யனுப்பினார்கள். ஒரு வருஷத்துக்குள் டோராவை யவ்விடம்விட்டு மாற்றினவுடன், வால்ஸால் கிராமத்தார் அவள் அன்பையும் உதவியையும் உணர்ந்து, சங்கத்தாருடன் வாதாடினார்கள். அச்சமயத்தில், தன் தகப்பனார் வெகு அசௌக்கியமாயிருப்பதாயும், தன்னைப் பார்க்க மிகவும் விரும்புவதாயும், டோரா கேள்விப்பட்டாள். உடனே யவள் தன் தகப்பனாரைப் போய்ப் பார்க்க விடை கொடுக்கும்படி சங்கத்தாருக்குத் 'தந்தி' யடித்தாள். சங்கத்தார் உடனே, தகப்பனாரைப் பார்க்கப் போகக் கூடாதென்றும், அயல் ஜில்லாவிலுள்ள ஓர் பிணியாளிக்குப் பணிவிடைசெய்யப் போகும்படிக்குங் கட்டளை யிட்டார்கள். அந்தோ! டோரா அக்கொடிய கட்டளைப்படி நடந்தாள். அவள்தகப்பனார் அவளைப் பாராமலிறந்தார்.

மனிதர்களுக்குப் புத்தியிருப்பது, தாங்கள் அப்புத்தியைப் பிரயோசனப் படுத்தும்பொருட்டே யொழிய, மற்றவர் சொற்படி குருட்டுத்தனமாய் நடப்பதற்கல்ல. புத்தி யுள்ளமட்டும் நாம் செய்யுங் காரியங்களுக்கு நாமே யுத்தரவாதிகளாகிறோம். நாம் பெற்ற புத்தி யாகிய விளக்கை யணைத்துவிட்டு, பிறரால் நடத்தப்படுதல் பாவமே. டோரா அப்படிச் செய்ததற்கு அவள் பட்டமனவருத்தமே போதுமான தண்டனையாயிருந்தது. அவள் 1875-ம் வருஷத்தில் சங்கத்தை விட்டுவிட்டாள். காரணங் கேட்டோருக்கு "நான் ஒருபுத்தியுள்ளபெண்பிள்ளை, இஷ்டப்படி யாளப்படும் வீட்டுச் சாமான்களிலொன்றல்ல" வென்று சொன்னாள்.

தன் தகப்பனார் இறந்தமுதல் டோரா 'வால்ஸால்'கிராமத்துப்பிணியாளிகளுக்காகவும் அநாதைகளுக்காகவும் உழைத்துவந்தாள். சொந்தமனக்கவலைகளையும்விசனங்களையும்மறக்கும்பொருட்டு, தன்வேலையைவெகுஆவலுடன் செய்தாள். காயங்களைச் செவ்வையாக ஆற்றக்கூடிய தாதியாக வேண்டுமென்பதே யவளுடைய முக்கியவிருப்பம். வேலைக்கூடங்களில்நெருப்புப்படுவதாலுண்டாகும்புண்களை யாற்றுவதில், அவள் சாமர்த்திய முள்ளவளாயிருந்தாள். ஒரு வயது சென்ற வைத்தியர் அவளுக்குச் சொல்லிக் கொடுத்து வந்தார். ஒருவிசை யவரைக்கூட மிஞ்சிவிட்டாள். ஒரு கூலிக்காரன் வலதுகை விகாரமான சேதத்தை யடைந்தது. டோராவின் குருவாகிய வைத்தியர், மனிதன் பிழைக்

* இவர்கள் சங்கத்திற்சேரச் சில சடங்குகளுண்டு. அச்சடங்குகளின்படி சேர்த்துக்கொள்ளப்பட்ட மாதர் ஒவ்வொருவருக்கும் 'சகோதரி' என்கிற பட்டப்பேர் கொடுத்தழைப்பார்கள்.

கவேண்டுமானால் அவன்கையைப் பூராவாய்
அறுத்தெடுத்து விடவேண்டுமென்று சொன்
னார். டோரா, கையையும் மனிதனையுஞ் சொ
ஸ்தப்படுத்துவதாகச் சொல்லி, இரவும் பகலும்
தூங்காமல் மருந்துகள் போட்டு, கடைசியில்
சொஸ்தப்படுத்தி விட்டாள். அவள் குரு மற்ற
வைத்தியர்களுடன் டோராவைப் புகழ்ந்தார்.
சௌக்கியப் படுத்தப்பட்ட மனிதனுக்கு ஊ
ரார் "சகோதரிகை" யென்ற பட்டப்பெயரைக்
கொடுத்தார்கள். பிற்பாடு ஒருவிசை டோரா
அசௌக்கியமா யிருக்கும் பொழுது, அம்மனி
தன், ஒரு காதவழிக்கப்பால் இருந்த போதி
லும், தினமொருதரம் வந்து மணியையடிப்
பான். வேலைக்காரி வந்தவுடன் "சகோதரி
சௌக்கியமோ?" வென்று கேட்டு, பின், "அ
வள்கை' மணியை யடித்தது" என்று சொல்
லச்சொல்லி விட்டு, காதவழிக் கப்பாலுள்ள
வீட்டுக்கு நடந்து போவான். நெருப்புப் புண்
களிலுண்டாகும் கெட்ட நாற்றத்துக்கு அவள்
சிறிதும் அஞ்சுகிறதில்லை. ஒருவிசை மற்றத்
தாதிகளும் வைத்தியர்களுங்கூட மனம்பொறுக்
காமல் வெளியேபோய்விடத் தான் மாத்திர
மிருந்து பணிவிடை செய்தாள். கதைகள்
சொல்லியும், பரிகாசமாய்ப் பேசியும், நோயா
ளிகளின் மனதைத் தேற்றுவாள். நித்திரை
மத்தியில் நோயாளிகள் கூப்பிடுவதுபோற் சொ
ப்பனங்கண்டு விழிப்பாள். நோயாளிக ளெல்
லாம் அவளைத் தாயைப்போல் நேசித்தார்கள்.

ஒருகாலத்தில் வைசூரி கொடுமையாய்ப் பா
தித்தது. தான் வைசூரி காணப்படாதவளாயி
ருந்த போதிலும், அஞ்சாமல் வைசூரி மத்தி
யிற் பணிவிடைகள்செய்து வந்தாள். ஒருமனி
தன் கொடூரமாய்ப் பாதிக்கப்பட்டான். அவன்
சிநேகிதர்களும் பந்துக்களுங்கூட வீட்டைவிட்
டோடி விட்டார்கள். ஒரு பெண்பிள்ளைமாத்
திரம் பயங்கரமான அம்மனிதன்கூட விரு
ந்தாள். டோரா வந்தவுடன் மெழுகு வத்தி
யில்லாததைக்கண்டு, வாங்கிக்கொண்டு வரும்
படி அப்பெண்பிள்ளை கையிற் பணங்கொடுத்த
னுப்பினாள். அப்பெண்பிள்ளையோ நல்ல சம
யமென்றறிந்து ஓடிப்போய் விட்டாள். டோரா
மாத்திரம் அவன் வேண்டுகோளின்படி இராமு
ழுவதும்அவனுடன் இருட்டில் வீற்றிருந்து,கா
லையில் அவன் இறந்து போனபின் வெளியே
சென்றாள். அவளைக்கண்ட மாத்திரத்தில் யா
வரும் சந்தோஷத்தையும், மனதைரியத்தையு
மடைந்தார்கள். அவள் ஆறுமாதம் வைசூரி
'ஆசுபத்திரி' யில் வேலைசெய்தாள். வைத்தி
யர்கள் வரும்பொழுது தவிர மற்றப் பொழு
தெல்லாம் நோயாளிகளுடன் தனியே யிருக்
கும்படி நேரிட்டது. சரியான உதவி யில்லா
ததினால் அவளே முக்கியமாயுள்ள வேலைகளை
யெல்லாஞ் செய்தாள். ஒருநாளிரவில் ஒரு
வைசூரி நோயாளி கம்பீர ஜன்னிபிறந்து படுக்
கைவிட்டெழுந்து வெளியே புறப்பட்டான்.
டோரா வாசலிற் கைகளைவைத்து மறைத்துக்
கொண்டாள். அவன் எதிர்க்கத் தலைப்பட,
டோரா விடிந்து வைத்தியர் வருமளவும், அவ
னைப் பலத்தினால் படுக்கையிற் கிடத்திப் பிடித்
துக்கொண்டிருக்க வேண்டியதாயிற்று. வை
சூரிகண்ட நோயாளிகள் உடம்பழுகி அவர்கள்
மேல் புழுக்கள் நெளியும்பொழுதுங்கூட, அரு
வருப்பின்றிப் பணிவிடைகள்செய்து வந்தாள்.
அவள் மனோதைரியத்தைப்பற்றி அநேக விஷ
யங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. குடிவெறி
கொண்ட ஒருமனிதன் 'ஆசுபத்திரி'க்கு வந்து,
இரவெல்லாம் அங்கே கழிக்க விரும்புவதாகச்
சொன்னான். என்ன சொல்லியும் கேளாததி
னால், டோரா வழியை மறித்துக்கொண்டு நின்
றாள். அம்மனிதனோ அவள் முன்பாகச் சாவ
காசமா யுட்கார்ந்து கொண்டான். மற்றத்தாதி
கள் பயந்து ஓடிப்போய் விட்டார்கள். டோரா
வழிவிட மாட்டாளென்றறிந்து, அம்மனிதன்
சமையலறை வாசலுக்கு ஓடினான். டோரா
ஓடிப்போய் அதையும்மறைத்துக்கொண்டாள்.
அவன் தன்னை அடிப்பானென்று எண்ணினாள்.
அப்படியின்றி, அவன் அவள் தைரியத்தைமெச்
சிக்கொண்டே வெளியேபோய் விட்டான்.

டோரா நோயாளிகளின் சரீர நோய்களைச்
சொஸ்தப் படுத்தினதுந் தவிர, அவர்களுடைய
ஆத்தும விருத்தியையுங் கோரினாள். அவள்
மூலமாய்த் துன்மார்க்கத்தைவிட்டுச் சன்மார்
க்கத்தில் நடக்க முயன்றவர் அநேகர். அவள்
பரோபகாரச்சிந்தையையும் அன்பையுங்கண்ட
துஷ்டர்களுங்கூடச் சாந்தகுண முள்ளவர்களா

னார்கள். கெட்ட நடத்தைகளுள்ள ஓர் நோயாளி தூங்கி விழிக்கும்பொழுது, அன்பே உருவெடுத்துத்தன்படுக்கையருகே தன்க்ஷேமத்துக்காகத் தேவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருப்பதைக்காணு வானாயின், அவன் மனம் உருகுமல்லவா? இவ்விதமாயும், அன்புள்ளார் மட்டும் அறியும் பலவித நற்செய்கைகளாலும், டோரா அப் பட்டணத்தாரைத் தனக்குக் கடமைப் படுத்திக்கொண்டாள்.

டோரா நாற்பத்திநாலு வயதானவளாயிருக்கும்பொழுது, தான் ஓர்கொடிய தீராநோயால் பிடியுண்டிருப்பதை யறிந்தாள். அவளுடைய மனோதைரியமும் முறண்டும் இதிலும் வெளிப்பட்டன. சரீரதிடத்திற் சிறந்தவளாயும், நோயாளிகளுக்குத் தாய்போன்றவளாயு முள்ள இப்பெண்மணி தனக்குவந்த நோயைவெளியிடலாகாதென்றுநினைத்து ஒருவரிடமுஞ் சொல்லவில்லை. நோயின் துன்பங்களை யெல்லாம் இரகசியமாய்ச் சகித்துக்கொண்டு, தன் வேலைகளைக் குறைபடாமற் செய்துவந்தாள். தன் வருத்தத்தை நன்குமறைக்கும் பொருட்டும், தானிறப்பதற்குமுன் தன்னாற்கூடியமட்டும் நன்மை செய்வதற்காகக் கீர்த்திபெற்ற வைத்தியர்களிடம் வேலை கற்கும் பொருட்டும், கொஞ்ச காலத்துக்கு லண்டன்* பாரிஸ்† முதலிய பட்டணங்களுக்குப் போயிருந்தாள். 1878-ம் வருஷத்தில் டோரா வால்ஸாலுக்குத் திரும்பி வந்தாள். அதே வருஷத்தில் அப்பட்டணத்து மேலதிகாரி (Mayor) அவள்பெயரால் ஒருபுது 'ஆசுபத்திரி' யேற்படுத்தினர். அப்பொழுது அவள் வெகு அசௌக்கியமா யிருந்தாள். தான் சாகுமளவும் எப்பொழுதும்போல் உல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்தாள். அதே வருஷத்தில் 'சகோதரி டோரா' இறந்துபோனாள். ஜனங்களின் விசனம் இவ்வள வவ்வளவன்று. பக்தியுடனும் நன்றியறிதலுடனும் அனேக ஞாபகச் சின்னங்கள் ஏற்படுத்தினார்கள். கூலிசெய்து பிழைக்கும் ஜனங்கள் சுத்தவெள்ளையான பளிங்குக் கல்லினால் (Marble) அவளைப்போல் ஓர் சிலையடித்து நிறுத்தினார்கள்.

* அங்கிலேய தேசத்தின் இராஜதானி. உலகத்திலுள்ள பட்டணங்களி லெல்லாம் பெரிது.

† பிரான்ஸ் தேசத்தின் இராஜதானி.

இச்சரித்திரத்தால் நாம் முக்கியமா யறியக்கூடிய தொன்றுளது. சாதாரண ஜனங்கள் பாக்கியவான்களாக மதிக்கும் தன்னயமே கருதும் தனவான்களில், யாரேனும், டோரா தன் பரோபகாரங்களில் அடைந்த ஆநந்தத்தில் ஓர் சிறுபங்காயினும் அடைகிறார்களென்று நினைக்கிறீர்களோ? எவனொருவன் தன்னயத்தையே பாராட்டித் தன் மனங்களித் தலையே முக்கியமாகக்கொண்டு நடக்கிறானோ, அவனெண்ணம் நிறைவேறுகிறதில்லை. நிறைவேறினும் அது புகழத்தக்கதன்று. பிறரைக் களிக்கச் செய்வதில்தான் மகிழ்ச்சியடைதலே பரோபகாரத்தின் பண்பாம். அந் நற்குணமுண்டாயின் வருத்தந் தோன்றாது. பிறருக்குழைப்பதே முக்கிய சந்தோஷமாய் விடும். இதனால் தன்னயத்தை இகழ வேணுமென்பது பொருளல்ல. தன்னயத்தைமட்டுங் கருதலாகாது. அப்படிச்செய்தல் "அன்புடையார்" செய்கையல்ல. "அன்புடையார் என்பு முரியர் பிறர்க்கு."

பேரீ.

---

## தமிழ்ப்பாஷை.

### தமிழ்ப் பாஷையிலுள்ள இலக்கியங்கள்.

(த. சரவணமுத்துப்பிள்ளை பி. எ. அவர்கள் இயற்றியது.)

(57-வது பக்கத் தொடர்ச்சி.)

இவை தோன்றியகாலத்தே திருவள்ளுவர்குறள். தோன்றிப் பொருளில் இவை யாவற்றிற்குஞ் சிறந்ததும், தமிழ் எனுமாது உச்சியிற்றரிக்குஞ்சூடாமணியெனச்சொல்லக்கூடியதும், தமிழின்பெருமையை யெங்கும் பரவச்செய்ததும், சாதிபேதம்மதபேதமின்றி யாருமெக்காலத்துங் கைக்கொள்ளக் கூடியதும், தமிழர்க்குப் பெருஞ்செல்வமாயதும் திருவள்ளுவரியற்றிய திருக்குறளே. இந்நூல் லத்தீன் பாஷையிலிருவராலும் பிரான்சிலொருவராலும்,ஜர்மேனிய பாஷையிலொருவராலும், ஆங்கிலேயபாஷையில் மூவராலும் மொழிபெயர்க் கப்பட்டுளதாயின் இதன் பெருமையையாரோ எடுத்துரைக்கவல்லேன்; தமிழ்வேதமென்னும் பெயருமிதற்குத் தகுந்ததே; இவ்விதநூல் வேறொருபாஷையிலு மில்லையாயின் இதனாற்றமிழ

லடையும்பெருமை யிவ்வளவிற்றெனவெடுத்துரைக்க
ற்பாற்றே! இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு
என்னும் நான்கில் அறம், பொருள், இன்பமென்னும்
மூன்றையுமே 1330 குறளிற்கூறுவது. வீட்டைப்
பற்றி யேன்கூறவில்லையோ தெரிதலரிது. வள்ளுவர்
நான்கையும்பற்றி யெழுதியிருப்பார்; வீட்டுப்பாகம்
இறந்துபோயிருக்க வேண்டுமென்பர் சிலர். அறம்,
பொருள், இன்பம் மூன்றும்பாடி வீட்டைப்பற்றிப்
பாடுமுன் வள்ளுவர் இறந்திருப்பர் என்பர் சிலர்.
அனுபவத்தைக்கொண்டு அறம், பொருள், இன்பம்
என்னும்மூன்றையும் பற்றியுறுதியாச் சொல்லியவர்
வீட்டைப்பற்றி யுறுதியாச்சொல்ல முடியாமையின்
எழுதாது விட்டனர் என்பர்சிலர். இந்நூல் சகல
சாதிகளிடத்திலும், சகலமதத்தரிடத்திலும், பரம்ப
வேண்டுமென்னும் விருப்புடையோராய், சகலர்க்கும்
பொதுவான அறம், பொருள், இன்பம் என்னுமூன்
றையும்சொல்லி வீடு சகலர்க்கும் பொதுவாகாமை
யின் கூறாது விட்டனர் என்பர் ஒரு சாரார். அஃ
தெவ்வாறாயினுமாகுக, அது இற்றைக்காயிர வருடங்
கட்கு முன் குறள் போன்ற ஒருநூல் இயற்றியதமி
ழர் மிகவுஞ் சீர்திருந்தியிருந்தனர் என்பதற்கான்ற
அத்தாட்சியாகும். ஆயின், இவ்வள்ளுவர் எங்கிருந்த
னரோ, யாது தொழிற்செய்தனரோ, எம்மதத்தின
ரோ, எக்காலத்திருந்தனரோ இவை யாருமறியா
மறைபொருளா யிருக்கின்றன. மயிலாப்பூரி லிருந்த
னர் என்றும், நெய்தற்றொழில் செய்தன ரென்றும்
பெரும்பான்மையும் சொல்வர். சைவர்கள் இவரைச்
சைவரென்பர். வைணவர் வைணவரென்பர். போப்
(Dr. Pope) துரை கிறிஸ்தவர் என்பர் போலும்,
சமணர் இவரைச் சமணரென்றே கூறுவர். இக்காலத்
திலேயே திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி முத
லிய நிகண்டுகளும், பவணந்திமுனிவரியற்றிய நன்
னூலும் எழுதப்பட்டன எனக்கூறுவர். இத்துடன்
தமிழணங்கின் வாலிபதிசையும் பூர்த்தியாயிற்றெ
னக் கூறல்வேண்டும். இவற்றிற்கும், இவற்றிற்குப்
பின்வரும் மற்றைய நூல்களுக்குமுள்ள பேதத்தை
நோக்குங்காலத்து, இவ்விருகாலத்துக்கு மிடையில்
இருநூறு முந்நூறு வருடங்கள் சென்றிருக்க வேண்
டுமெனத் தோற்றுகின்றது. ஆயின் இடையேசென்ற
இக்காலத்து நூல்கள் எழுதப்பட்டனவோ, எழுதப்
படவில்லையோ, இல்லையேல் அது யாது காரணம்
பற்றியோ, இவை யார்க்கும் புலப்படா.

**கம்பராமாயணம்.**

இற்றைக்கு ஏறக்குறைய ஆயிர
வருடங்களுக்கு முன்னே தமி
ழில் இராமாயணம்பாடப்பட்ட
தென்பர் சிலர். சமஸ்கிருதத்
திற்கு வான்மீகியும், கிரேக்கருக்கு
ஹோமரும், ஆங்கிலேயர்க்கு மில்ட்டனும் போலத்
தமிழுக்குக் கம்பருளர். உலகத்திலுள்ள மலை
கள் யாவற்றிற்கும் இமயமலை யெவ்விதமோ அவ்வி
தமே தமிழிலுள்ள கவிகள் யாவர்க்குங் கம்பர். கம்
பரின் அறிவும், கம்பரின் வாக்குவல்லபமும் இவ்வள
விற்றென அளவிடற்பாலனவோ? சிறந்தகவி யொ
ருவர்க்கு வேண்டியகுணங்கள் யாவையோ அவையா
வுங் கம்பரில் நிறைந்திருக்கின்றன. மற்றுந் தமிழ்க்க
விகளிலுள்ள குறைகள்கம்பரிலும் ஆங்காங்கே தோற்
றுகினும் இதரதேயக் கவிகளிலுள்ள நற்குணங்கள்
யாவும் கம்பரில் காணப்படுகின்றன. தமிழிலக்கியத்
தின் மகிமை நம்பாதவொருவற்குக் கம்பராமாயண
மொன்றுமே தமிழின் மகிமையை நிலை நிறுத்தும்
இதரதேயத்து முக்கிய கவிகளுடன் சம ஆசனத்
தினுட்காருந்தகைமை யுடையவர் கம்பரே. தமிழ
ணங்கினுச்சியிலணியும் இரத்தினச்சூடாமணி திருக்கு
றளாயின், அவ்வணங்கின் மார்பில்துலங்கும் நவரத்
தின மிழைத்த மகரகண்டிகை கம்பராமாயணமென்
பதற்குச் சிறிதுமைய முளதோ? கம்பர் வான்மீகத்
திலிருந்தபடி இராமாயணத்தை மொழி பெயர்த்த
வரல்லர். இராமாயணக்கதையை யெடுத்துக்கொ
ண்டு தானொரு இராமாயணமியற்றியவரோ. வான்மீக
இராமாயணத்திற்கும கம்பராமாயணத்திற்கும்கதை
யிலேயே பலவிடத்திற் பேதமிருக்கின்றன. இரண்டு
இராமயணத்தையும் பார்த்தோர் சிலர் கம்பராமாய
ணமே சிறந்ததென்பர். கதைசொல்லும் விதத்தி
லும், வர்ணனையிலும், ஒருவரோ டொருவரைப் பே
சச்செய்யும் விதத்திலும் கம்பருக் கிணையாவோர்
தமிழில் வேறு யாவர்? அதுவுமன்றிக் கம்பராமாய
ணத்தை யெங்கெடுத்துப் பார்க்கிலும் அங்கங்கே
அற்புதமாயிருக்கும். சிலகாலத்துக்கு முன் யான் கம்
பராமாயணம் வாசிக்கத்தொடங்கிப் பாலகாண்டம்
வாசித்தபொழுது இராமாயணத்திற் பாலகாணடமே
சிறந்தபாகமென நினைத்திருந்தேன். பின் அயோத்
தியாகாண்டம் வாசிக்கும் பொழுது பாலகாண்டத்
தைப் பார்க்கிலும் அயோத்தியகாண்டமே சிறந்த
தென்றேன். பின் ஆரணியகாண்டத்திற்கு வந்த
பொழுது சந்தேகமின்றி ஆரணியகாண்டமே சிறந்த
தென்றேன். யுத்தகாண்டம் வரைக்கும் வாசித்தோ
ரொருவர் யுத்தகாண்டம் மற்றெல்லாக் காண்டத்
தைப்பார்க்கினுஞ் சிறந்ததென்றார். இவ்விதங் கூ
றின் சிறந்ததெது சிறவாததெது? ஆதிதொடங்கி யந்
தம்வரையும ஆனந்தக்கடலா யிருக்குமாகின் அதன்
சிறப்பை யெடுத்துரைக்க யானோ வல்லேன்? தமி
ழிலிருக்கும் நூல்களிற் கம்பராமாயணந்தவிர மற்று
யாவு மழிந்தபோதிலும், கம்பராமாயண மொன்று
மே தமிழுக்கு அளவிறந்த பெருமை கொடுக்குமா
யின், கம்பராமாயணம் இத்தன்மைத்தெனச் சொ
லற்பாலதோ! அதுநிற்கக் கம்பர்யார்? அரசன் என்

பார் ஒரு சாரார். வேளாளனென்பார் மற்றொரு சாரார். வைணவனென்பர் வைணவர், சைவன் என்பர் சைவர், சமணனென்பார் யாருங்காணோம். 'கற்றோர்கவியுட் பெரிதாந்தமிழ்க் கம்பநாடன்' சரித்திரமே இவ்வாறிருக்கின் தமிழ்ப்புலவர்சரித்திரம் எங்கு கண்டு பிடிப்பேம்? இராமாயணம் முழுவதும் கம்பரால் பாடப்பட்டதன்று. பாலகாண்டமுதல் யுத்தகாண்டம் வரைக்குமே கம்பர் பன்னீராயிரத்துச் சொச்சச்செய்யுளாற் செய்திருக்கின்றனர். உத்தரராமாயணம் அவர்காலத்து வசித்த ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்டுள்ளது. அவர்காலத்து வசித்த புகழேந்திப் புலவரால் நளவெண்பா வென்னும் திவ்விய கிரந்த மியற்றப்பட்டது.

**ஔவையார்.** இக்காலத்திற்கு முன் எட்டுத்தொகை, பத்துப்பாட்டுத் தோன்றிய காலத்திருந்த ஔவையாரையும் யாம் கவனியாதுவிடக்கூடாது. ஔவையார்இயற்றியபெருங்கிரந்தமில்லாது போயினும் யாம்அனைவருஞ் சிறுவயதிற் கற்ற ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலியவற்றை மறத்தலரிதாயிருக்கின்றதே. அதுவுமன்றி ஔவையார் பெண்ணென்றபொழுதே அவர்பெயரை யாம் எப்பொழுதும் மனதில்வைத்திருக்க வேண்டியதாயு மிருக்கிறது. முற்காலத்தில் பெண்கல்வி யிருந்ததற்கும் இது அத்தாட்சியாகின்றது.

**தேவாரங்கள்.** இராமாயணம்முதலிய தோன்றிய காலத்திற்கு முந்தியே தமிழ்ப்பாஷைக்குச்சிறந்த பாக்கியமாகிய தேவாரங்களெழுதப்பட்டன. இவை அப்பர், சுந்தரர், சம்பந்தரென்னு மூவராலெழுதப்பட்டன. இவர்மூவரில்பிந்தியவர்சுந்தரரே. யாவுங்கடவுள்மேல் துதியாகக்கூறப்பட்டனவேனும் தமிழ்ப்பாஷையின் வல்லபத்தையும் இனிமையையுந் தெற்றெனக்காட்டக்கூடியவை இவைகளே. வாசிப்போர் மனதையுருக்கும் வல்லமை தமிழிற்கில்லை யென்போர்க்குத் தேவாரப் புத்தக மொன்றைக் கையிற்கொடுத்தல் நன்மருந்தாகும். தேவார மேதேனு மொன்றைப் பண்ணுடன் சொல்லுங் காலத்து நிரீச்சுரவாதிக்கும் மனமுருகுமாயின் தேவாரத்தின் சிறப்பைச்சொல்லவும் வேண்டுமோ? மாணிக்கவாசகரியற்றிய திருவாசகமு மித்தன்மையதே. திருவாசகம் தேவாரத்திற்கு முந்தியதே போலும். இத்தன்மையதான வைணவர்க்குச்சிறந்த திருவாய் மொழியும் ஏறக்குறைய இக்காலத்திலேயே தோன்றியது.

**பாரதம், நைடதம்.** இவை யாவற்றிற்கும் ஐந்தாறு நூற்றாண்டிற்குப் பிந்தியே தமிழில் பாரதமும் நைடதமுமெழுதப்பட்டன. இதற்குமுதல்சங்கத்தார் காலத்தெழுதிய பெருந்தேவனார் பாரதமே வழங்கியிருக்க வேண்டும். அது வெண்பாவாலும், வசனத்தாலு மியற்றப்பட்டது. பின், வில்லிபுத்தூரார் இயற்றியது விருத்தப்பாரதம். இது மிகவும் நல்ல நூலாயினும் தமிழிலிருக்கும் முக்கிய நூல்களிலொன்றன்று. வில்லிபுத்தூரார் பாரதக் கதையைச் சுருக்கி யெழுதியது மன்றி, முடியவும் எழுதவில்லை. பாரத யுத்தம் முடிய வில்லிபுத்தூரார் பாரதமும் முடிகின்றது. சமஸ்கிருதத்திற்கு வியாசர் பாரதம் எவ்வளவு கீர்த்தி பெருக்கிற்றோ அதிற் பாதியேனும் தமிழிற்கு வில்லிபுத்தூரார் பாரதஞ் செய்யவில்லை. அதிவீரராம பாண்டியனியற்றிய நைடதம் பலராலும் புகழப்பட்டதேனும் மிகவுஞ் சிறந்த நூலன்று. தமிழிலக்கியம் கற்கத் தொடங்குவோர்க்கு முதலில் மிகவும ஆனந்தங்கொடுப்பது நைடதம். ஆயின் அதன்சிறப்புவரவரக்குறையும். அதிவீரராமன்மற்றுங் கவிகளைப்பார்த்துத் தன் யுக்தி வல்லபத்தாற் செய்ததுவே யொழிய நைடதம் கம்பரைப் போன்ற ஒரு மகாகவியினு லியற்றப்பட்ட நூலன்று. நைடதந்தவிர அதிவீரராமன் காசிகாண்டமும், கூர்மபுராணமும், வெற்றிவேற்கையும் இன்னுஞ் சிலசிறு நூல்களு மியற்றினன். இக்காலத்திலேயே ஈழதேயத்தி லிருந்த மகாகவியாகிய அரசகேசரி யென்பவரால் இரகுவம்மிசந் தமிழிலியற்றப்பட்டது. அது மிகவும் சிறந்தநூலே; ஆயின் அது இந்தியாக்கரையில் மிகவும் வழங்கக்காணோம். இக்காலத்து, சமஸ்கிருதம் மிகவும் பிரபல்லியமடைந்த தென்பதும், தமிழ்வித்துவான்கள் பலரும் சமஸ்கிருதங் கற்று அதிலுள்ளபடி தமிழிற் கிரந்தமியற்றத் தொடங்கினரென்பதும், சிறந்தகவிகளாகிய அதிவீரராம பாண்டியன், வில்லிபுத்தூரார், அரசகேசரி முதலியோர் சமஸ்கிருத நூல்களைத் தமிழிலெழுதுவதில் திருப்தியடைந்திருந்தமையே காட்டும்.

**புராணங்கள்.** இனிப் புராணத்தைப் பற்றிச் சற்று விசாரிப்போம். புராணந் தொடங்கியகாலத்திலேயே தமிழுக்கும் அஷ்டமத்திற் சனிவந்தது. தமிழ் மகிமையிழந்ததற்கும், சிறந்த காவியமுதலியவை யெழுதப்படாது போயதற்கும், புராணமே முக்கியகாரணமென யான் நினைக்கின்றேன். தமிழிலெழுதக்கூடிய பெருநூல்களில் மிகவுஞ் சுலபமா யெழுதக்கூடியது தலபுராணமே. பிற்காலத்துத் தலபுராணங்கள் கணக்கற்றுப் பெருகியதும் இதனாலேயே. இப்புராணங்கள் எழுதப்பட்டிருக்கும் பாஷையிலிருந்தும், இப்புராணங்களிற் கூறப்படும் விஷயங்களிலிருந்தும், தமிழணங்கிற்கு வாக்குமாறிய விருத்தாப்பியகாலம் வந்தது தோற்றும். புராணகாலத்தை யிருகூறாகப் பிரிக்கலாம். முற்கூற்றில்வரும் புராணங்கள் மிகவும் சிறந்தவைகளே. மேற்கூறிய குற்றங்கள் இவற்றிற்

குப் பொருந்தா. இப்புராணங்களை இயற்றியோர், இராமாயணம், சிந்தாமணிமுதலிய நூல்களை மாதிரியாக வைத்து எழுதினவர்களாகையால் இப்புராணங்களும் மிகவுஞ் சிறந்திருக்கின்றன. பரஞ்சோதிமாமுனிவரியற்றிய திருவிளையாடற் புராணமும், சிவஞான முனிவரியற்றிய காஞ்சிப்புராணமும், கச்சியப்ப முனிவரியற்றிய தணிகைப் புராணமும், கச்சியப்ப சிவாசாரியரியற்றிய கந்தபுராணமுமே புராணங்களுட் சிறந்தன.

திருவிளையாடற்புராணம் சிவபெருமானது அறுபத்துநாலு திருவிளையாடலையும் பற்றிக்கூறும். இதிலேயே பாண்டியரது சரிதமும் தமிழ்ச்சங்கத்தின் சரிதமுங் கூறப்பட்டுள்ளது. இது மிகவும் பழநூலன்று.

பெரியபுராணம் அறுபத்துமூன்று சிவனடியார்களின் சரித்திரத்தைக் கூறுவது. இது சேக்கிழார் சுவாமிகளாலியற்றப்பட்டது; சைவர்களால் மிகவும் கொண்டாடப்படுவது.

காஞ்சிப்புராணம், தணிகைப்புராணம் இரண்டும் தலபுராணம். இவை பிற்காலத்தன.

கந்தபுராணம் ஸ்ரீ கைலாயபதியாகிய சிவபெருமானின் திருக்குமாரர் சுப்பிரமணியக்கடவுளின் சரித்திரத்தைக் கூறுவது. புராணங்களுட்சிறந்த திதுவெனச் சொல்லவேண்டும். இதைப் பெருங்காப்பியமெனல் மிகவும் பொருந்தும். கம்பராமாயணத்திற்குச் சற்றே இட்டவரும் மகத்துவத்தையுடையது. கற்றறிந்தோர்க்கு மிகவுமாநந்தங் கொடுக்கும் வல்லமைத்து. சொற்சுவை, பொருட்சுவை, சந்தச்சுவை ஏராளமாய் நிறைந்துள்ளது. ஆங்கிலேயர்முதலிய பிறசாதியார்க்குத் தமிழின் மகிமைக் கெடுத்துக் காட்டாக நூல்காட்டவேண்டுமேல் முதல்இராமாயணம்,இரண்டாவது கந்தப்புராணம் எனக் காட்டக்கூடிய தகைமைத்து தமிழ்நூல்களிற்சிறந்தவற்றுள் முக்கியமானதொன்று. பதினாயிரத்துச் செய்யுட்கொண்டது.இது தென்னிந்தியாவில் மிகவும் வழங்காமைக்கும், நமது சர்வ கலாசாலையாரால் எடுத்தாளப்படாமைக்கும் காரணம் யாதோ அது என் சிற்றறிவுக் கெட்டிலது.

**தாயுமானவர் பாடல்.**

இரண்டொரு நூற்றாண்டிற்கு முந்தி யிருந்த தாயுமானவர் பாடல்களும் சாமான்னிய மானவை யல்ல. வேதாந்தக்கடலைக் கரைகண்டுணர்ந்து வேதாந்த முழுவதையும் செவிக்குமதுரமான பாக்களாற் பாடியருளின தாயுமானவர் தமிழிற்கோர் சிறந்த ஆபரணமன்றோ? கற்றோர்தவிரக் கல்லாமூடர் வாயிலும் சாதாரணமாய்வருவது தாயுமானவர்பாட்டன்றோ? தாயுமானவரைக் கொண்டன்றோ அனேக ஏழைப் பண்டாரங்கள் வயிறு வளர்க்கின்றனர்?

**பிற்கூற்றுப் புராணங்கள்.**

புராணங்களை யிரு கூறுகப் பிரித்து முற் கூற்றைப் பற்றிச் சிறிது சொன்னேன். பிற் கூற்றுப் புராணங்களின் காலமே தமிழுக்குங் கலிகாலம். விருத்தாப்பிய மடைந்த தமிழணங்கிற்குப் பஞ்சப்புலனும் இக்காலத்துக் கெட்டன போலும். இப்புராணங்களே தமிழைப் பாழாக்கின பெரும்பேருடையன. ஆலையில்லாவூருக்கு இலுப்பைப்பூச் சர்க்கரைபோலவும், ஊமைக்குளறுவாயன் மகாவித்துவானென்பது போலேயும், தட்டிப்பேச ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப்பிரசண்டனென்பது போலேயும், காரிகை கற்றுச் சொற்றொடர்க்கப் பழகினோர் யாவரும் புராணமெழுதத் தொடங்கின் தமிழென்ன பாடு தான் படாது? தமிழிலிருக்கும் புராணங்களோ நூற்றுக்கணக்கா யிருக்கின்றன. ஆயினவை நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது போகிப்பண்டிகையில் அக்கினிவளர்த்தற்கே தக்கனவாயின், இப்புராணங்களிருக்கின்றனவென்று யாம் மகிழவும் வேண்டுமோ? இப்புராணிகர்தமிழிற்காவது உலகத்திற்காவது யாது நன்மைதான் செய்தனரோ! இவற்றை நினைக்குந்தோறும் எனக்கு மனம் புழுங்கு கின்றது; காணுந்தோறுங் கண்கலங்குகின்றது. அந்தோ! இந்நிலைமை தமிழுக்கும் வரவேண்டுமோ! புராண காலத்தின் முற்கூற்றிற் சிறந்த புராணங்கள் சில வெடுத்துக் காட்டினேன். இப்பிற் கூற்றிலும் சிறந்த புராணங்கள் சிலவுளவேனும் எடுத்துக் காட்டிற் பெருகுமாகவின் காட்டாது விட்டனன்.

**கோவை.**

இதுநிற்க,கோவையென்னும் பெயருடைத்தாய், அகப்பொருண்மேலதாயியற்றப்படும் நூல்கள் தமிழிற் சிலவுள. இவ்வித நூல்கள்வேறு யாதொருபாஷையிலு மிருப்பதாக யான் கேள்விப் பட்டிலேன். இவை தமிழ்க்கே உரியன. இவற்றுட்பலவுளவேனும், மாணிக்கவாசக ரியற்றிய திருக்கோவையாரும், பொய்யாமொழிப் புலவரியற்றிய தஞ்சைவாணன் கோவையுமே மிகவும் பலராலும் வாசிக்கப்படுவன.

**மற்றுமுள்ள கிரந்தங்கள்.**

முற்கூறிய இலக்கண நூல்களன்றி 'யாப்பருங்கலம்' 'யாப்பருங்கலக்காரிகை' என்னும் யாப்பிலக்கணங்களும், 'தண்டியலங்காரம்' 'மாறனலங்காரம்' என்னும் அணியிலக்கணங்களும் பழைய கிரந்தங்களே. ஆயின் எக்காலத்திற்குரியனவோ அறியேன்.

பிற்காலத்திய தமிழிலக்கணங்களுள் வைத்தியநாதநாவலரியற்றிய இலக்கண விளக்கமும், ஈசானதேசிகரியற்றிய இலக்கணக்கொத்தும், சுப்பிரமணிய தீக்ஷிதர் இயற்றிய பிரயோகவிவேகமும், சிவஞான சுவாமிகளியற்றிய தொல்காப்பியச், சூத்திரவிருத்தியும், இலக்கணவிளக்கச் சூறாவளியும் சங்கரநமச்சிவாயப் புலவர் எழுதிய நன்னூல்விருத்தியுமே சிறந்தன.

# சாவித்திரி சரித்திரம்.

## இரண்டாவது அதிகாரம்.

என் அத்தையம்மாளைத் துரத்தியான பின் செங்கமலம் தன் ஊருக்குக் கடிதம் எழுதினாள். அடுத்த வாரத்தில், அவளுடையதாய்தந்தையர்களும், உடன் பிறந்தவர்களும் வந்துசேர்ந்தார்கள். செங்கமலத்தின் தாய் ஒரு கொடிய நீலி. பொல்லாத சூதுக்காரி. ஒருவருக்கும் பயப்படமாட்டாள். அவள் கருத்தையெதிர்க்க ஒருவரும்துணியமாட்டார்கள். சாந்தகுணமுள்ள அவளுடைய கணவர், அவள் முன்பு, பூனையைக் கண்ட எலிபோல் பதறி நடப்பர். அவளுடைய குழந்தைகளோ அம்மா சொல் தட்டமாட்டார்கள். அவர்கள் செங்கமலத்தைப் பார்த்துப் போக வந்தார்களென்று நான் நினைத்திருந்தேன். அப்படியன்று; மறுநாள் நடந்த சமபாஷணையால், வந்ததின் கருத்து வெளிப்பட்டது.

சாயங்காலம் நாங்கள் எல்லோரும் சமையல் அறைப்பக்கத்தில் தலைவாரிக்கொண்டு உட்கார்ந்திருந்தோம். என் தகப்பனாரும், செங்கமலத்தின் தகப்பனாரும், நாங்கள் இருந்த இடத்திலிருந்தே அவர்களுடன் பேசும்படிக்கு, நடையில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். செங்கமலத்தின் தாயாகிய விசாலாக்ஷி அம்மாள் பேசத்தொடங்கினாள்:—

"ஓய்மாப்பிள்ளை! இப்பொழுதுதங்கம்விலையென்ன?"

"பவுன் பதினைந்து ரூபாயாகவிருக்கிறது. விலை உயரலாம்; இறங்குவதற்கு இடமில்லை."

விசாலாக்ஷி:—"ஆனால் உயர்வதற்குமுன்பாகச்செங்கமலத்துக்குஓர் பவுன்மாலை செய்துபோடவேண்டும். வெறும் கழுத்து விகாரமாயிருக்கிறது. எங்கள் ஊர்த் தட்டான் நல்லவேலைக்காரன். நகைகள்வெகுநேர்த்தியாய்ச் செய்கிறான். சங்கரய்யர்பெண் காமாக்ஷிக்கு அறுநூறு ரூபாயில் ஓர் பவுன்மாலை அவள் புருஷன் செய்து போட்டிருக்கிறான். அவனுக்கு மாதம் முந்நூறு ரூபாய் கிடைக்கிறது." பெருமூச்சுவிட்டுக் கொண்டு: "செங்கமலத்தை முதலில் அவனுக்குக் கேட்டார்கள். அதிஷ்டம் வேண்டாமா? இனிமேற் சொல்லிக் கதையென்ன? என்னிடத்தில் அறுநூறு ரூபாய் கொடும், நான்செய்து அனுப்புகிறேன்."

என் தகப்பனார்:—"இரண்டு மூன்று வருஷம் கழித்துப் பார்ப்போம். சாவித்திரிக்கும், கோபாலனுக்கும் கலியாணம் செய்ய வேண்டியிருக்கிறது. பணமோ கையிலில்லை. இந்தச் சமயத்தில் நான் அறுநூறுரூபாய்க்கு எங்கே போகட்டும், அன்றியும், என் தரத்துக்கு, அறுநூறு ரூபாய்க்குப் பவுன் மாலைசெய்தால் ஊரார் கைதட்டிச் சிரிப்பார்கள். பண்ணைக் கிருஷ்ணய்யர் பெண்ணுக்குக் கூட மொத்தம் அறுநூறு ரூபாய்க்கு நகையில்லையே. அப்படியிருக்க—"

விசாலாக்ஷி:—"அப்படியுமிருந்தது, இப்படியுமிருந்தது! கிடக்கிறான் கைம்பெண்டாட்டி! பண்ணையாரென்றால் எனக்கென்ன? இவனைப்போல் நூறு பண்ணையாரை நான் பார்த்திருக்கிறேன். என் குழந்தை செங்கமலத்தைவிட இவன் பெண் உயர்த்தியோ? என்குழந்தை இந்தவயதில் நகையில்லாமலிருப்பதோ சரி? உம்முடைய குழந்தைகளுக்குக் கலியாணம் செய்தாலும் செய்யாமற் போனாலும் எனக்கென்ன? பவுன்மாலை யிப்பொழுது செய்துதீரவேண்டும்."

என்தகப்பனார்:—"பவுன் மாலைசெய்வதற்குத்தடையொன்றுமில்லை. இப்பொழுது முடியாதென்றுதான் சொன்னேன். சர்க்கார்த்தீர்வை கூடச்செலுத்தியாகவில்லை," என்றார். உடனே செங்கமலத்தின் தமக்கை யொருத்தி சொன்னதாவது:— "அம்மா! வீண் பேச்சுப்பேசுவதேன்? நான் அப்பொழுதே சொல்லவில்லையா? இவர்கள் வீட்டுக்குக் காளைபோல் உழைப்பதற்குச் செங்கமலத்தை விட்டுவிட்டோம். அவளுக்கேது நகை? சோறுபோட்டாற் போதாதா? செல்லக்குழந்தை கோபாலனுக்கு அருமைக் கலியாணம் செய்ய வேண்டாமா?" என்று கொடுமையாய்ச் சொன்னாள். கோபாலனைத் தூஷித்தவுடன், எனக்கு அடங்காக் கண்ணீர் பெருக, நான் கோபத்துடன் முன்பின் யோசியாமற் சொன்னதாவது:—"கோபாலன்எங்களுக்குஅருமைதான். அவன் எங்கேயோபோய் வாசித்துக் கொண்டிருக்கிறான். அவனைப்பற்றியேன்பேசுகிறீர்கள்?" என்றேன். உடனே விசாலாக்ஷியம்மாள், அன்பாய்ப் பேசுவதுபோல் "அம்மா! தங்கப் பெண்ணே! சாவித்திரி! நீயும் அருமைதானே?" யென்று கேட்க, செங்கமலம், "சீ! சீ! அவள் எருமை"யென்றாள். எனக்குக் கோபமும் வெட்கமும் அதிகரிக்க, நான் சொன்னதாவது:—"நானும் அருமையாய்த்தான் வளர்ந்து வந்தேன். உங்கள் செங்கமலம் இந்தவீட்டுள் காலெடுத்துவைத்த நாள்முதல், கலகமேதவிர வேறில்லை. அவள்தான் என் அத்தையம்மாளையும் துரத்தி, என் அருமையையும் கெடுத்தாள். அவளைவிட அருமையாய்த்தான் என்னை வளர்த்து வந்தார்கள். தேவடியாள் மினுக்கு மினுக்கிப் பெண்களை விற்பது எங்களுக்குத் தெரியாது." என் தகப்பனார் "வாயை மூடிக்கொண்டிரு" என்று கோபமாய்ச் சொன்னார். மற்றவர்கள் எல்லோரும், "சாவித்திரியை விற்றால் உழக்குத் தவிடுகூடக்கிடைக்காது"என்றும், "மாட்டுக்குப் புல்லறுக்கக் கூட உதவமாட்டாள்" என்றும், "அவளேன் புல்லறுக்க வேணும்? இராணி மகன் அவளைத்தான் கலியாணம் செய்துகொள்ள

விரும்புவதாகக் கடிதம் வந்திருக்கிறது'' என்றும், "சீ! உனக்குத்தெரியாது, இராணிமகனுக்குக் கலியாணம் ஆய்விட்டது, பொய் சொல்லாதே, இராணி பேரனுக்குத்தான் இவளைக் கலியாணம்செய்து கொடுக்கப் போகிறார்கள்'' என்றும், பலவிதமாய்க் கேலி பண்ணிக்கொண் டிருந்தார்கள். நான் ஓர் மூலையில் அழுதுகொண்டு நின்றேன். என் தகப்பனார் தலையைக் கவிழ்ந்துகொண்டு உட்கார்ந்திருந்தார்.

கொஞ்சநேரத்துக்குப் பின் விசாலாக்ஷியம்மாள் மறுபடியுஞ் சொன்னதாவது:— ''மாப்பிள்ளை! இதெல்லா மிருக்கட்டும். நீர் பணம் தரவேண்டாம். கலியாணத்துக்குமுன், செங்கமலத்தின் பெயருக்கு இரண்டாயிர ரூபாய் விலையுள்ள நிலம் எழுதிவைத்தீரே; அந்த நிலத்தின் இதுவரையுள்ள வருமானத்தைக் கொடும். அதைக் கொண்டு பவுன்மாலை செய்து கொள்ளுகிறோம்.''

என்தகப்பனார்:—அந்த நிலவருமானத்தை நீக்கி விட்டால், சோற்றுக்குக் கூடப்போதாதே.'' என்று கண்ணீர் ததும்பச் சொன்னார்.

விசாலாக்ஷி:—''அடிசெருப்பாலே, ஆற்றுக்கு அப்பாலே! நன்றாய்ச்சொன்னாய்! சோற்றுக்கில்லாத கைம்பெண்டாட்டிக்கு இரண்டாம் கலியாணம் ஏனோ? இவனுக்கோ என் பெண்மணியைக் கொடுத்தேன்! கழுதைக்குத் தெரியுமோ கற்பூரவாசனை? என் பெண்ணுனக்குச் சோறும் போட்டுக்கொண்டு அடியும்பட்டுக் கொண்டிருப்பாளென்று நினைத்தாயோ? சென்ற செவ்வாய்க்கிழமை யிராத்திரி யேன் அடித்தாய்?'' என்று கேட்டாள்.

[அடித்தசங்கதி எனக்கு அதுவரையும் தெரியாது.]

என் தகப்பனார்:—''உங்கள் பெண்ணிடத்திலேயே கேளுங்கள். நான் சாயங்காலம் கொல்லைவழியாய் வரும்பொழுது, கீரைப்பாத்திக்குப் பக்கத்தில் செங்கமலம் இராமய்யருடன் பேசிக்கொண்டிருந்தாள். இராமய்யருடைய குணம் உங்களுக்குத் தெரியாது. அவர் கெட்ட நடத்தையுள்ள துஷ்டர். இந்த ஊர்க் குலப்பெண்கள் ஒருவரும் அவருடன் பேசமாட்டார்கள். யோக்கியர்கள் அவரைத் தங்கள் வீட்டுக்குள்வர வொட்டார்கள். அப்படிப்பட்ட மனிதனிடத்தில், அயலூர்ப் பெண்ணாகிய செங்கமலம் பேசிக்கொண்டிருந்தாள். என்னைக் கண்டவுடன் இராமய்யர் திடுக்கிட்டு ஓடிவிட்டார். நான் செங்கமலத்தைக் கேட்க, இராமய்யருக்கும் அவள் தமையன் சாமிநாதனுக்கும் இஷ்டமென்றும், ஆகையால் தஞ்சாவூரிலிருந்து கடிதம் வந்ததோ வென்று கேட்டுக்கொண்டிருந்ததாயும் சொன்னாள். நான் அதெல்லாம் கூடாதென்று சொல்ல, அவள் கேட்காமல் தகாதபடி பேசினதினால் அடித்தேன்.''

விசாலாக்ஷி:—''இந்தக்கிழட்டுப்பிணத்தைக் கட்டியழவும் வேண்டாம்; அடிபடவும்வேண்டாம். ஒரு வேளையில்லா விட்டால் ஒருவேளை கொன்று விடுவன். செங்கமலம்! உன்னிலத்தை விற்று விட்டு நம்மூருக்குப்போவோம்வா. அவன்எக்கேடுகெட்டாவது இரந்து குடிக்கட்டும்.'' என்று சொல்லிக்கொண்டேயெழுந்திருந்தாள். செங்கமலம், "அம்மா! நிலம் விற்றுகிறவரையும் இராமய்யர் வீட்டிலிருக்கலாம்'' என்று சொன்னாள். அப்படியே அவர்கள் இராத்திரியே இராமய்யர் வீட்டுக்குப் போய் விட்டார்கள்.

விசனகரமானதை விவரித்துக் கூறவேண்டாம். என்தகப்பனார் வியாபாரத்திற் சம்பாதித்தபொருளைக் கொண்டு வாங்கின நிலமானதால், அவர்கள் விற்றதைத்தடுக்க முடியவில்லை. சமாதானஞ் செய்யும் பொருட்டுத் தன்னிடத்தில் வந்த ஊர் கிரகஸ்தர்களுக்கெல்லாம், விசாலாக்ஷி யம்மாள், தன் மகளை விட்டு விட்டுப்போனால் என் தகப்பனார் கொன்று விடுவாரென்று போக்குச்சொல்லிவிட்டு, நிலம் விற்ற பணத்தை யெடுத்துக்கொண்டு, தன்மகளையுங்கூட்டிக்கொண்டு ஒரு வாரத்தில் தஞ்சாவூர்போய்ச் சேர்ந்தாள்.

செங்கமலம் போகவே யென் அத்தையம்மாள் வந்தாள். அவள் வந்தவுடன் என்னை மாரோடணைத்துக்கொண்டு அழுகையில், எனக்கு ஆநந்தக்கண்ணீர் பெருகிற்று. ஆனால் தகப்பனாரோ, அதுமுதல் வெகு துக்கத்தில் ஆழ்ந்திருந்தார். வெளியே போகிறதில்லை. தான் பாடுபட்டுத்தேடிய பொருளும், தான் ஆசைப்பட்ட பெண்டாட்டியும் போனதுமன்றி, அவமானமும், தரித்திரமும்வந்து சேர்ந்தன. அவர் முக்காடு போட்டுக்கொண்டு படுத்திருக்கும் பொழுதாவது, அல்லது தலையைக் கவிழ்ந்து கொண்டு பெருமூச் செறியும்பொழுதாவது, அவரைப் பார்த்தால் எனக்குக் கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகிவிடும். ஐயோ! இறந்துபோன தாயாருக்குத் துக்கப்பட்டதைப் பார்க்கிலும், உயிரோடிருந்த தகப்பனாருக்கு நான் அதிகமாய்த் துக்கப்பட்டேன்.

செங்கமலம் வந்து கொஞ்சநாள் முதல், அவர் என்னிடத்தில் அதிகமாய்ப் பேசுகிறதில்லை. அவள் போனபின்பும், துக்கத்தினாலும், அவளால் நான் பட்டகஷ்டங்களை நினைத்தும், முன்போலவே, கொஞ்சி விளையாடிப் பேசாமலிருந்தார். ஒரு நாள் அவருக்கு ஒருகடிதம் வந்தது. நான் தபாற்காரனிடத்திலிருந்து அதைவாங்கி அவர்கையிற் கொடுத்துவிட்டு, மூக்குக்கண்ணாடியுங் கொணர்ந்து கொடுத்தேன். அவர் அதை வாசித்துவிட்டுக் கீழே யெறிந்தார். நான் பதறிக் கொஞ்சதூரத்தில் நின்றேன். அவர் அதை மறுபடியும் எடுத்து வாசித்து முன்போலவே யெறிந்

துவிட்டு, கைகளால் தலையைத் தாங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். நான் அவருக்குக் கண்ணீர் பெருகுவதை யறிந்தேன். எனக்கும் கண்ணீர் பெருகிற்று. அவர்பெருமூச்சு விடுவதை யென்னாற் பொறுக்க முடியவில்லை. நான் கடிதத்தை மறந்து விட்டேன். அவரைக் கட்டிக்கொண்டால், துக்கம் தணியுமென்று நினைத்தேன். உடனே ஓடிப்போய் அவர் கழுத்தைக் கட்டிக்கொண்டேன். இருவரும் ஒன்றுஞ் சொல்லாமல் விசித்து விசித்து அழுதோம். அவர் தன்மாரோடு என்னை யிறுகத் தழுவிக் கொண்டார். கொஞ்ச நேரத்துக்குப் பின் நான் அழுது கொண்டே சொன்னதாவது:—"அப்பா! நீர் ஏன் விசனப்படுகிறீர்? நீரே,விசனப்பட்டால் நானென்ன செய்வேன்? அத்தையம்மாள்,செங்கமலத்தால் தரித்திரம் வந்ததென்று சொன்னாள். நமக்குச் சாப்பாட்டுக்குக் காணாதா? திருவனந்தபுரம் வியாபாரத்திற் கிடைக்கும் பணம் நமக்குப்போதுமே. எங்கள் கலியாணத்திற் கென்ன: என்னைக் கன்னிகாதானம் செய்ய வேண்டாம்; எனக்கு ரூபாய் வாங்கினால், அதுவே என் கலியாணச் செலவுக்கும், கோபாலன் கலியாணத்திற்கும் போதும். பிற்பாடு கோபாலன் சம்பாதிக்கமாட்டானா?"நீர் வீணாய் மனதை புண்படுத்திக் கொள்ள வேண்டாம்" என்றேன். அவர் என்னை முன்னிலும் இறுகத்தழுவிக்கொண்டு அதிகமாய் அழுதாரேயொழிய ஒன்றுஞ் சொல்லவில்லை. அதற்குள் அத்தையம்மாள் வாய்க்காலிலிருந்து வந்து சேர்ந்தாள். அவள் எங்களிருவரையும் பார்த்தவுடன் மனம் நடுங்கி, "அப்பா! சுப்பயா! என்ன விசேஷம்? ஏது கடிதம்? கோபாலன் சௌக்கியமோ?" என்றுகேட்டாள். எனக்கு அப்பொழுதுதான்கடிதம் ஞாபகத்திற்கு வந்தது. என் தகப்பனார் பதிற்சொல்வதற்கு முன், ஒரு நிமிஷத்தில் என் மனம் பட்டதுன்பம் சொல்லிமுடியாது. அவர் மறுமொழி, நடுக்காட்டில் தாகத்தினாற் களைத்து விழுந்த பிரயாணிக்குத் தண்ணீர் எப்படியிருக்குமோ, அப்படி யெனக்கிருந்தது. அவர்சொன்னதாவது:—"கோபாலன் சௌக்கியமாயிருக்கிறான். திருவனந்தபுரம் வியாபாரம் முழுகிப்போய் விட்டதாய்க் கடிதம் வந்திருக்கிறது. சொற்பவருமானமும் போயிற்று. இந்தவீடும், ஒரு சிறு வயலுந்தான் மீந்தன. ஐயோ!, என் கோபாலனும், சாவித்திரியும், என்ன செய்வார்கள்." என்று நெற்றியிற் புடைத்துக்கொண்டு கீழேசாய்ந்து விழுந்து விட்டார்.

சாவித்திரி.

---

## *சுவர்க்க நீக்கம்

(மொழிபெயர்ப்பு)

### முகவுரை.

இந்நூல் இங்கிலீஷ் பாஷையில் 'மில்ட்டன்' என்னும் மஹாகவியாற் செய்யப்பட்டுள்ள பெருங்காவியம். சகலமனுஷ ஜாதியாருக்கும் மூலபிதா மாதாக்களென்னும் ஆதாம் ஏவாளாகிய ஆதிமக்கள், ஏதேன் தேசத்திற் பலவளங்களுமலிந்து மனோகரமாய் விளங்கிய ஓர் சிங்காரவனமே சுவர்க்கமாக அச்சுவர்க்கத்தில் இனிதாக வாழ்ந்த காலத்திலே, கடவுள் தின்னக்கூடாதென்று விலக்கியிருந்த விலக்குமரக் கனியைச் சாத்தானது வஞ்சனையி லகப்பட்டு மயங்கித்தின்று தேவகட்டளையை மீறிப் பாவஞ்செய்ததனால், *நித்தியத்துவம் நீங்கி மரணத்துக்குஞ் சகல துன்பங்களுக்கும் (அவர்களும் அவர்கள் மூலமாக அவர்கள் சந்ததியாராகிய எல்லாமனிதரும்) உள்ளாகி, அச்சுவர்க்கத்தினின்றும் நீக்கப்பட்ட விஷயத்தைக் கூறுவதனால் சுவர்க்க நீக்கமெனப் பெயரிடப் பெற்றது.தேவகுமாரன் யேசுகிறிஸ்துவென்னு நாமத்தோடு மனுஷனாக அவதரித்துச் சாத்தான் செய்த சோதனையைக்கடந்து, அவனைச் செயித்து, பாவநிவாரணஞ் செய்து, அவர்களிழந்திருந்த சுவர்க்கவாழ்வை யவர்களுக்கு மீட்டுக் கொடுத்ததைக் கூறும் ‡'சுவர்க்கமீட்சி' யென்னும் நூலும்மேற்கூறிய மகாகவி செய்ததே. இவ்விரண்டு நூலும், அங்கிலேயபாஷையின் சிறந்த கருத்துகளன்றி மற்றும் அனேக ஐரோப்பிய பாஷைகளின் சிறந்த கருத்துக்களும் †ஒருங்குவதியு மிடமாகி, கிறிஸ்தியமத வேதசாரத்தை யுள்ளடக்கி,அவ்வேதத்தின் பழைய, புதிய ஏற்பாடுகளிரண்டுமே சொற்சுவை பொருட்சுவை நிறைந்து பல அலங்காரங்கள் மலிந்து நவரசங்கொழிக்குங் காவியங்களாக உரு வெடுத்தாற் போன்றன வென்று புகழப் பெற்றவைகள். ஆயினும் இவற்றுள்'சுவர்க்கநீக்கம்' காவியலட்சணத்தில் மிகவுஞ் சிறந்தது. சுவர்க்க நீக்கத்திலும், முதலிரண்டு காண்டமே ஆரம்பமுதல் அந்தம்வரையும். அதியுன்னத கவி சாதுரியங்கள் இடைவிடாது நெருங்கத் தொடுத்தமைக்கப்பெற்ற பேராச்சரியகரமான உயர்வொப்பற்ற சிறந்த காவியப்பகுதிகள். மற்றப் பத்துக் காண்டங்களிலும் 'சுவர்க்கமீட்சி'யிலும் அவ்வளவு சிறந்த அற்புத வித்துவ சாமர்த்தியங்கள் இடையிடையே தோன்றுகின்றனவே யன்றி யெங்கும் ஒப்பக் காணப்படவில்லை. அங்கிலேய காவியங்களி யாவற்றினு மேலானதென்று சொல்லுதல், இச்சுவர்க்க நீக்கத்துக் கோர் சிறப்பன்று; பரந்த உலகின்கணுள்ள பல பாஷைகளிற் சிறந்த காவியங்களெவற்றினு மேம்பட்டதென்று அனேக வித்வான்களால் வியந்து கொண்டாடப்பெற்றது. முதவில் லத்தின் பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டுப் பின்பு கிரேக்க, பிராஞ்சிய, இத்தாலிய, உலாந்திய, ஜெர்மானிய, ஆர்மீனிய,ஸ்பானிய,போர்த்துகீஸிய,

---

* Paradise Lost.

* நித்தியத்துவம்—என்றுஞ்சாகாத்தன்மை.

‡ Paradise Regained.

† ஒருங்குவதிதல்—ஒன்றுசேர்ந்துவாழ்தல்,

ருஷிய, சுவேதேனிய, ஐஸிலாந்திய பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டதன்றித் தமிழிலும் இதன் கருப்பொருளடங்கிய 'ஆதிநந்தவனப்பிரளயம்' என்னும் பெயரையுடைய நாடகமொன்று வேதக்கண்ணுஐயர் இயற்றியிருக்கிறாரென்றும், இதன் முதற்காண்டம் யோவான் சாமுவேல்ஐயரால் வசனரூபமாகச் செய்யப்பட்டிருக்கிறதென்றும், தோமாஸ் வேதநாயகநாடார் தாம் இதற்குப் பூங்காவனப் பிரளயம் என்று பெயர் கொடுத்துத் தமிழில் அம்மானையாக மொழிபெயர்க்க முயன்று அச்சேற்றியிருக்கும் முதலிரண்டு காண்டங்களின் மொழிபெயர்ப்படங்கிய புஸ்தகத்திற் கூறியிருக்கிறார். யானும் முதற்காண்டத்தை விருத்தப்பாவில் மொழிபெயர்த்திருக்கிறேன். இன்னம் வேறு யார்யார், எந்தெந்த ரூபமாக, இந்நூல்முழுவதையுமாவது, ஓர்பகுதியையாவது, தமிழாக்கி யிருக்கிறார்களோ அறியேன். இவ்வாறிருக்கவும், இப்போது முதற்காண்டத்தையும் பின்பு கூடுமானால் மற்றக் காண்டங்களையும் தமிழில் வசனரூபமாக எழுதக் கருதுகின்றேன். ஏனெனில், இந்த அரும்பெருங்காவியம், பலராலும் பல ரூபமாக மொழிபெயர்க்கப் பட்டாலும், அவைகளொவ்வொன்றையும் வாசிப்போர்க்கு நூதனம் நூதனமான இனிமையைத்தந்து மகிழ்விக்கு மென்பதனாலும், ஒரு மொழிபெயர்ப்பிற் றோன்றாதொழிந்த அலங்காரங்கள் மற்றொன்றிற் றோன்றலாமென்பதினாலுமே. இராமாயணம் பாரத முதலிய நூல்கள் ஹிந்துக்கள் பொழுது போக்குக் குபயோகமாகுதல் போல, இந்நூல், தென்னிந்தியா, யாழ்ப்பாணமுதலிய தமிழ் வழங்குந் தேசங்களிலுள்ள அனேக ஆயிரரான கிறிஸ்தியர்கள் காலக்ஷேபத்திற் குதவுமென்பதிற் சந்தேகமில்லை. சிந்தாமணி முதலிய சமண நூல்களை, அவற்றிலுள்ள மதவிரோதங் கருதாது நூல்வனப்பை நோக்கும்படி, மற்றச் சமயத்தவர்கள் விருப்பத்துடன் படித்து மகிழ்தல்போல, இதனை யேசு சமயிகளல்லாதவர்களும் வாசித்தானந்தமடைவார்களென்று நம்புகின்றேன்.

முதனூலையும் அதன் வியாக்கியானங்களையும் நேராகப் பார்த்தறிதற்குக் கருவியாகிய அங்கிலேய பாஷா ஞானமில்லாதவர்கள், நூலின்விஷயத்தையும் நூலெழுதுவதில் நூலாசிரியர்க்கிருந்த நோக்கங்கள் நன்குவிளங்கும் அவர் சரித்திரத்தையும் அறிந்தபின் மொழிபெயர்ப்பை வாசிப்பது நலமாதலால், அவைகள் முதலிலெழுதப்படும்.

இந்நூலின் கருத்துக்கள் நன்றாக விளங்கும்படி செய்யப்பட்டிருக்கிற அருமையான பல வியாக்கியானங்களின் உதவியைக் கொண்டு இம்முகவுரையும் மொழிபெயர்ப்பும் எழுதப்படுகின்றன. அவ்வியாக்கியான கர்த்தாக்கள் பலருக்கும், அவர்களுள் விசேஷமாக 'டேவிட் மேஸன்' பண்டிதருக்கும் டாக்டர் பிராட்ஷாவுக்கும் எனது வந்தனங்களுரியன. பல தேசங்களிலும் பலகாலங்களிலும் முதன்மைபெற்று விளங்கிய பாவலருள் முதற்பாவலர் அன்றெனின் அவர்களு ளொருவரெனச் சகலபண்டிதர்களாலும் நன்கு மதிக்கப்பெற்ற மில்ட்டனுருடைய நூல்களுட் சிறந்த இக்காவியத்தின் மொழிபெயர்ப்பைத் தனது அருமைப் பத்திரிகைவாயிலாக யாவரும் வாசித்தறியும்படி பிரசுரஞ்செய்யச் சம்மதந்தந்த விவேகசிந்தாமணிப் பத்திராதிபருக்கு எனது அத்தியந்த வந்தனங்களுரியன.

வே. ப. சு.

## தமிழ்மொழி வளர்த்தல்

அல்லது

### தமிழ்ப்பாஷையை அபிவிர்த்திசெய்யும் மார்க்கங்கள்.

முதலாவது, நம்தேசத்துச் சிறுவர்களுக்குத்தமிழ்ப்பாஷையில் உயர்தரக் கல்வி பயிற்றுவிக்கும்படி, தகுந்த ஏற்பாடுகளுடன் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிப்பது. இது எவ்வளவோ முக்கியமான விஷயமாயிருந்தும், அனேகர், இதன் பெருமையை அறியாமல் அசட்டையாக இருக்கின்றார்கள். இதைப் பற்றிக் கவனிக்காமலிருந்தால், அதனாலுண்டாகும் கேடு ஒரு இடத்தைப் பிடிப்பதன்று, நமது நாடு முழுவதும் பிடிப்பது; ஒருநாளைக் கேடன்று, பல ஆயுள் முழுவதும் நஷ்டம். ஏனென்றால், 'அஞ்சில் அறிந்ததே அறுபதிலும்,' 'பிஞ்சிலிருந்ததே பெரிதானபிறகும்,' 'விளையும்பயிர் முளையிலே தெரியும்' 'முதற்கோணலானால் முற்றுங் கோணல்' என்றிருக்கின்றபடியால். குழந்தைகளுக்கு அச்சிறுபோதிலே நாம் தமிழில் தாற்பரியம் உண்டாகச் செய்யாவிட்டால், அவர்கள் முதிர்போதில், தமிழ் நம்முடைய பாஷையோ, இல்லையோ என்று சந்தேகிக்கும்படியான நிலைமையிலும் வந்துவிடுவார்கள். அப்புறம் அதைப்பற்றி எவ்வளவுதான் புத்திபுகட்டினும், 'செவிடன்காதிற் சங்குஊதினது' போலாகும். 'கழுதைக்குத்தெரியுமோ கஸ்தூரிவாசனை' யென்றிருக்கிறதே. அனேகர், தற்காலத்தில், தங்கள் குழந்தைகளை இங்கிலீஷ்படிக்க ஐந்துவயது ஆறுவயதிலேயே அனுப்பிவிடுகிறார்கள். தந்தையார் தமது குழந்தைகளுக்குத் தமிழில் கல்வி கற்பிக்கவேண்டுமே என்ற சிந்தனையே சற்றுமில்லாமல், "ஏனய்யா, உம்முடைய பையன் தமிழ் வாசிக்க வேண்டாமோ? அது நம்முடைய சுயபாஷை யல்லவோ?' என்றொருவர் கேட்டால், அதற்கு அவர்: 'எல்லாம் சரிதான். தமிழினாலே இப்போது நமக்கு ஆகவேண்டியதென்ன?

இங்கிலீஷ் அல்லவோ படிக்கவேண்டும்? அதனாலல்லவோ நமக்குப் பிழைப்பு? தமிழ்ப்பாஷை வேண்டுமென்றால் இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் கொஞ்சம் தமிழும் சொல்லிவைக்கிறார்களே, அதுபோதாதா? அல்லாவிட்டால், தமிழை அவன் தானே படித்துக் கொள்ளட்டும். தமிழ்ப் படிப்புத்தான் என்ன வெகுதொல்லையா? அரிச்சுவடி, எண்சுவடி இரண்டும் படித்து, சாதாரணமாய் எழுத வாசிக்கத் தெரிந்தால், எந்தச் சபையிலும் முந்தியிருக்கலாமே. அவ்வளவும் போதாதா?' என்றும் கேட்கிறார். தமிழைப்பற்றி இவ்வளவு மூடமும், அசட்டையும் தகப்பனுக் கிருந்தால், மகனுக்கு அதில் இருமடங்கு அஜாக்கிரதையும், மூடமும் இருக்குமென்று சொல்லாமலே அமையும். "நச்சுமரம் நல்லகனியைத் தருமா?" "வேப்பமரத்தில் மாம்பழம் பறிக்கலாமா?" ஆகவே, பையன் தமிழென்கிற ஞாபகமேயில்லாமல் அங்கிலேயம் கற்கப் போகின்றான். போனாலோ, அங்கே தமிழ்மொழியை அருமருந்துபோலச் சிறிது எடுத்துப் பரிமாறுவதைக் கேட்கும்போது, பையன் "இவ்விடத்திலிருந்து எப்படித் தப்பிக் கொள்ளலாம்? முனுஷியார் மணிநேரம் எப்போது தொலையுமோ?" என்று மனங்கசியப் பிரார்த்திக்கும் நிலைமையிலிருக்கிறான். வகுப்பு (class) வகுப்பாக எப்படியாவது தப்புவித்துக்கொண்டு மேல் வகுப்புக்குப் போய்விட்டானானால், யூனிவர்ஸிற்றி (University) என்றொரு புலி அங்கே குந்திக்கொண்டிருப்பதைப் பார்த்து, தட்டுக்கெட்டுத் தடுமாறி, வேர்த்து விருவிருத்து, இதனிடத்தில் நம்முடைய பருப்பு வேகாது, இனித் தமிழ்ப்பாஷையை, ஆமணக்கெண்ணெய் உட்கொள்வதுபோல, பல்லைக் கடித்துக்கொண்டாவது சற்றுநாள் உட்கொள்ள வேண்டுமே யென்று அதன்பிறகு தன்னையறியாமல் அவசியம் தோன்றி 'நெல்வாங்கிப் போகுமட்டும் நில்லாய் நெடுஞ்சுவரே' என்றபடி மனமில்லாமல் படிக்கத் தொடங்குகிறான். இவ்விதமாக அப்பாடசாலையில் அவனுக்கு எம்மட்டில் தமிழ்க்கல்வி விர்த்தியாகுமென்று ஊகித்துக்கொள்ளுங்கள். படித்துப் பரிக்ஷை கொடுத்துத் தீர்ந்தால், தான் அதுவரைக்குந் தமிழில் வாசித்த இம்மியை அபக்கென்று வெளியே கக்கிவிட்டுப் போகிறான். எங்கேயென்றால், தன்தகப்பன் முதலில் எதை உத்தேசித்து தன்னை அங்கிலேயம்படிக்க வைத்தாரோ அதற்கு. அதாவது, அனேக வருத்தத்துடன், சிபார்சுதேடிச் சேர்ந்து கச்சேரியில் ஏதாவது ஒரு மூலையில் முடங்கிக்கொண்டு வெள்ளைக் காகிதத்தில் இறகு ஓட்டும் விஷயத்தில் தன் சாமர்த்தியத்தை யெல்லாம் செலுத்துகிறான். ஆனால் அவன் முன் இங்கிலீஷ் பாடசாலையில் அறிந்த அறிவும் கற்ற கல்வியும், அவனுக்கு அங்கே எள்ளளவாவது பிரயோஜனமாகிறதில்லை. வேதாந்தத்திற்கும், கச்சேரி யந்திர வேலைக்கும் எத்தனை தூரம்? தான் இங்கிலீஷில் அறிந்த அறிவை ஜனங்களுக்குத் தமிழிலெடுத்துரைத்துஜனோபகாரம் செய்யலாமென்றாலோ, அதற்கு அவன் தமிழென்ற பெருவழியில் நடமாடினதேயில்லை. தம்பி தமிழில் வாய் திறந்துவிட்டால், கைத்தாளம்போட ஆயிரம் பேர் வேண்டிவரும். இந்தப்படியாக, தன்பாஷை தெரியாமல், பிறபாஷை படித்தும் பயன்படாமல், தனக்கும் சுகமின்றி, பிறர்க்கும் சுகமின்றியாக்குவன்றோ தகப்பன் முதல்முதல் பையனைத் தமிழ்ப்பள்ளிக்கூடத்திற்கு அனுப்பாமலிருந்தது? இப்படி முன்பின் யோசித்தறியாமல் அனேகர் நடக்கின்ற காரணத்தால், தமிழ்ப் பள்ளிக்கூடங்களும் அடியோடே எடுபட்டுப்போகின்றன.

குழந்தைகளின்றித் தமிழ் உபாத்தியாயர்கள் என்னசெய்வார்கள்? தூங்குவார்களா? அதற்கு வீடல்லவோ இடம்? ஆகையால், தகப்பன் புத்தியால், அதாவது புத்தியின்மையால், தன் பையன்கெட்டு, இப்படி அனேகம் சிறுவர்கள் கெடுவதால், பிற்காலம் தமிழ்நாடு முழுவதும் தமிழ்ப்பாஷையாகிய சுயபாஷைவிட்டு, பிறபாஷையும் கெட்டு, ஜனங்கள் அல்லோல கல்லோல மடைகிறார்கள். சிநேகிதர்களே! இதனால் விளையும் தீங்கு சிறிதோ? ஊகித்துப் பாருங்கள்! இந்தக்காரியத்தை அற்பமென்று தள்ளிவிடவேண்டாம். "குடரைப்பிடுங்கிக் காண்பிக்கும்போது வாழைநாரென்று" தள்ளாதேயுங்கள். 'தன்னைப்பெற்ற ஆத்தாள் கிண்ணிப்பிச்சை எடுக்கும்போது, பிள்ளை கும்பகோணத்தில் கோதானம் செய்யும்" நீதியை விடுங்கள், விடுங்கள்! இந்தத் திருவனந்தபுரம் பட்டணத்தையே உதாரணமாக எடுத்துப் பார்ப்போம். இதில், தமிழைச் சுயபாஷையாக வுடையவர் அனேகருளர். ஆகிலும், பத்து வருஷத்திற்கு முன் இங்கு தமிழ்க்கல்வியிருந்த சீரில், அது ஐந்து வருஷத்திற்குமுன் இருந்ததில்லை. ஐந்து வருஷத்திற்கு முன்னிருந்த நிலைமையில் அது இப்போது காணப்படவில்லை. முன் எட்டுப் பத்துப் பள்ளிக்கூடங்கள் இருந்த இவ்விடத்தில் இப்போது தமிழ்ப்பள்ளிக்கூடம் காண்பது குதிரைக்குக் கொம்புகாண்பது போலிருக்கிறது. தமிழ்ச் சங்கமென்பதுமில்லை, தமிழ்ச் சங்கத்தினுடைய மணமுமில்லை. இப்படிப்பட்ட பெரிய பட்டணங்களிலேயே தமிழ்ப் பாடசாலைகளாவது, தமிழ்ச்சங்கங்களாவது தழைக்கக் காண்பது அரிதானால், இவ்விஷயத்தில் நாஞ்சிநாடு முதலிய நாட்டுப்பிரதேசங்களின் கதி அதோகதிதான் என்பதும் சொல்லவேண்டுமா? அதிலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் சிற்றூரிலும் தமிழ்ப்பயிற்சி எவ்வளவு பரிதாபமான நிலையிலிருக்க வேண்டும்! அந்தோ! அந்தோ! திருவிழா, சதி

ரென்றால் ஆயிரக்கணக்காய்ப் பணத்தைக் கொட்டியளக்கும் ஜனங்களுக்கு எல்லாப் பாக்கியத்திற்கும் ஊற்றாகி, உடந்தையாயிருக்கின்ற இந்தக்கல்வி அபிவிர்த்தி விஷயம். மாத்திரந்தானா பாவம்செய்தது? உலகத்தில் பெரியதர்மங்களுள் இதுவும் ஒரு அரிய தர்மமென்ற உண்மையை ஜனங்கள் அகக்கண்திறந்து அறிந்திலரோ? இதுவோ தேசாபிமானம்! இதுவோ பாஷாபிமானம்! இப்படியோ அஞ்ஞானக்கடலில் ஆழ்ந்துகிடக்கும் பாமரகோடிகளைக் கரையேற்றி விடுகிறது! இப்படியோ தாழ்ந்துகிடக்கும் பரதகண்டத்தை முன்னிருந்த அற்புதநிலையில் எழக் கைதூக்கி விடுகிறது! சயபாஷாபிமான முடைய கனவான்களே! தனவான்களே! நீங்கள் மற்றவிஷயங்களிற் செலுத்தும் கவனத்தில் நூற்றிலொரு பங்காவது இம்முக்கியமான விஷயத்திற் செலுத்தக்கூடாதா? அன்னியபாஷைகள் கைசோர்ந்தால் தலைகொடுக்கிறவர்கள், தமிழாகிய நம்தாய் தலையெடுக்காமல் மெலிந்து சோரும்போது, கையாவது கொடுத்து ஆதரிக்கவேண்டாமா? அத்தாய் நம்மையும் நம்முன்னோரையும் எத்தனையோகாலம் இனிமையான அமிர்தம் தந்து ஊட்டி வளர்த்ததை மறந்தீரோ? நீங்கள் என்ன என்ன எண்ணிக்கொண்டு இப்படி வாயும் கையுமில்லாப்பூச்சிகள்போல வாளா இருக்கிறீர்களோ அறியேன். இன்னும் தூங்கவேண்டாம்! இன்னும் மோசம்போக வேண்டாம்! எழுமின்! எழுமின்! வேலைதொடுமின்! இவ்விஷயத்தில் இப்போது கூடியசங்கம்போல அனேக சங்கங்கள் ஆங்காங்கே கூடச்செய்து இனியாவது இவ்விஷயத்தில் அதிக அக்கறை எடுத்துக்கொண்டு தமிழ்ப்பாடசாலைகளை எங்கும் ஸ்தாபிப்பதை எதிர்பார்த்துக்கொண்டே தமிழ்ப் பாஷாபிவிர்த்திக்கேற்ற இன்னுமொரு வழியைப்பற்றிச் சிந்திப்போம்.

இரண்டாவது, தமிழ்ப் பாஷையை அபிவிர்த்தி செய்ய மற்றோருபாயம் என்னவென்றால், பிரிட்டிஷ் கவர்ன்மென்டார் ஜனங்களுடைய கல்வி அபிவிர்த்திக் கென்று ஸ்தாபித்திருக்கும் யூனிவெர்ஸிற்றி சம்பந்தமாக விருக்கின்ற பாடசாலைகளில் தமிழை இப்போதிருப்பதைப் பார்க்கிலும் அதிகமாய்ப் பயிற்றுவிக்கும்படி ஏற்பாடு செய்தல். இதில் தமிழைப் பற்றிப் பேசுவது மற்றைய சுயபாஷைகளுக்கும் ஒக்கும். இப்போது நடந்துவருகின்ற ஏற்பாட்டின்படி மாணாக்கருக்குச் சுயபாஷையில் பயிற்சி என்று சொல்லத் தக்கவையொன்று அடைவதற்கு ஏலாது. பதினைந்து நாழிகையில் ஒருநாழிகையாவது, திருப்திகரமாய், சுயபாஷைவிஷயத்தில் கவனம் செலுத்தப்படுகிறதென்று நினைக்கவும் இடமில்லை. இதற்குள் மாணாக்கர் எவ்வளவு தமிழ்கற்கக்கூடும்? கடைசியாக, வருஷாந்தரப் பரீக்ஷையில் 'மொழிபெயர்ப்பு' என்ற ஒரு துறை யிருக்கின்றபடியால்; அனேகர், அதாவது பெரும்பான்மையோர், 'டெக்ஸ்றாக' (text) வைத்திருக்கும் பாடங்களை வருத்தமென்று படியாமல், மேற்சொல்லிய 'மொழிபெயர்ப்பு' என்னும் ஒரு திருக்கூத்துச் செய்துவிட்டு, அந்தத்துறைவழியாகப் பிழைத்தேன், பிழைத்தேன்' என்று பரீக்ஷையில், தப்பித்துக்கொள்ளுகிறார்கள். இப்படிப்பட்டவழிக்கோ, தமிழ்மாது கடாக்ஷம் செய்யப்போகிறாள்! இதுநிற்க, இப்போது கவர்ன்மெண்டார் இந்தியாவில் அங்கிலேயப் படிப்பை, வேரோடும் கிளையோடும், ஏற்படுத்தி விட்டபடியால், மாணாக்கரது சுயபாஷைக்குப் பெருமிடையூறு நேரிட்டிருப்பதைப் பற்றி, பம்பாயில் ஒரு ஐரோப்பிய கனவானே "கவர்ன்மெண்டார் பத்துவருஷத்திற்கு முன்னமே அறிந்து அந்த ஏற்பாட்டை மாறுபாடு செய்யாமல் இதுகாறும் சும்மாவிருந்தது மிகுந்த ஆச்சரியமே! அன்றியும் இந்தப் பக்ஷ பாதத்தை இப்போதாவது ஞானம் பிறந்து கட்டோடே ஒழிக்காவிட்டால் ஜனங்களுக்குக் கவர்ன் மெண்டாரால் நேரிடும் விபத்துக்கள் இவ்வளவு அவ்வளவு அல்ல," என்று தைரியமாய் எடுத்துப் பேசினதை "ஹிந்து" என்னும் பத்திரிகையில் நம்மவரிற் சிலர் வாசித்திருப்பாரே. அதைக் குறித்து அப்பத்திரிகாசிரியராகிய மகானுடைய அபிப்பிராயமும் அறிந்திருப்பாரே. பின்னும், இவ்விஷயத்தைப் பற்றி 'இந்தியன் நாஷனல் மாகஸின்' என்னும் பத்திரிகையில், மற்றொரு ஐரோப்பிய கனவான் சுயபாஷைப் பயிற்சியைக் குறித்து எழுதியபாகத்தில், "கவர்ன்மெண்டார்இந்துக்களுக்குச்சுயபாஷைப் பயிற்சியைக் கொடுக்கவேண்டுமென்று வெகுநாள் நான் கூப்பிட்டுச்சொல்லியும் அதைக்காட்டுக்கூப்பாடாக எண்ணிவிட்டார்களே! சுயபாஷைப்பயிற்சி நடத்தாவிடின், இராஜாங்க காரியமும் செம்மையாகாது, ஜனங்களுக்கும் குணமுண்டாகாது" என்று அனேகமுகாந்தரங்களுடன் சொல்லியிருப்பதைச் சிலர் பார்த்திருக்கலாம். பின்னும் கைத்தொழிற்சாலைகள் ஏற்படுத்தும் விஷயத்தைப்பற்றி, ஜனங்கள் பம்பாய்கவர்னர், 'ரே' பிரபுவைக் (Lord Reay) கேட்டுக்கொண்டதில், அவ்விஷயமாகவும் (Science) ஜடசாஸ்திர விஷயமாகவும் சுயபாஷைகளில் கிரந்தங்களில்லாமையைப்பற்றி அந்தப்பிரபு மிகுந்த பரிதாபமாய்ச் சொல்லியிருப்பதும், "மற்றப்படி கவர்ன்மெண்டார் கைத்தொழிற் சாலைகளேற்படுத்த அத்தியந்த ஆயத்தமாயிருக்கின்றோ மானாலும், சுயபாஷையில் அந்தக் கிரந்தங்களில்லாக் குறையால், நீங்கள்விசாரித்தது நடக்காமலேயிருக்கு" மென்றுசொன்னதும்பிரசித்தமாகத் தெரியவரும். இப்படி ஐரோப்பிய கனவான்களே, இந்தப்பெரிய பிசகையுணர்ந்து, அதனால் வரும் இடையூறுகளையும் பகிரங்கமாய் வெளியிடவா

றென்றால், நம்மவர் மாத்திரம் இதற்கு வாயில்லாப் பூச்சிகள்போல, ஏன் மௌனம் சாதித்து நிற்கவேண்டும்? முன் 'ஹிந்து' பத்திரிகையிற் சொல்லியிருந்தபடி, நம்முடைய சிறுவர்களை ஆங்கிலேய பாடசாலைகளுக்குச் சிறுவயதிலேயே அனுப்புகின்றோம். அப்படி இளம்பிராயத்தில் அப்பியசிக்கப் போகின்றவருக்கு, அங்கிலேயச் சிறுவரைப்போலன்றி, தெரியாத அன்னியபாஷையில் வா, போ, என்பதுமுதல் அனந்தம் வார்த்தைகளைப் புதிதாகக் கற்க வேண்டியதாக இருக்கிறது. இப்படி வார்த்தையைக் குட்டிப்பாடம் போடும் வேலையே-மெட்ரிக்குலேஷன் பரீக்ஷையாகிற வரையில் எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. எடுத்துக் கொண்டால்தான் அப்புறம் நான்கு வார்த்தையாவது சேர்த்துப் பேசுவதற்காகின்றது. இவ்வாறு, அங்கிலேயச்சிறுவர் பள்ளிக்கு வைக்கும்போதே சுயமாக அறிந்திருக்கிற வார்த்தைகளைப் படிப்பதற்கு, நம்மவருக்கு ஏறத்தாழப் பத்துவருஷம் பிடிக்கின்றது. கனவான்களே, எவ்வளவுக்குக் கற்றாலும் அதில் பிழையறப் பேசுவதும் எழுதுவதும் அரிது. நாம் எவ்வளவு வாசித்தாலும், நம்மை அங்கிலேயர் அதிலொருபொருட்டாயெண்ணமாட்டார்கள். அவர் அதில் நம்மையொருபொருட்டாயெண்ணுவது நமக்கொரு பெருமையுமல்ல, எண்ணாதது ஒரு குறைவுமல்ல. தமிழ் படித்த அங்கிலேயர் தமிழில் எவ்வளவு திருத்தமாய்ப் பேசுவார்களென்று அனைவரு மறிவோமே. அப்படியிருக்கையால்நம்மவர் அங்கிலேயத்தில்பூரணராகாதது ஒருகுறைவல்ல. அங்கிலேயம்படித்துத்தேறிய நம்மவர் அங்கிலேயத்தில் நூலெழுதப் புகுவது கடல்வெள்ளத்தில் ஒருபடிசுத்தவெள்ளத்தை விடுவது போலாகும். முன்னமே ஓங்கியுயர்ந்த அலைக்கு ஒத்தாசை எதற்கு வேண்டும்? நாம் அங்கிலேயம் படிப்பது காலக்ஷேபத்திற்காகவும் அறிவு விர்த்திக்காகவுமேயென்று யாவரும் ஒப்புக்கொள்ளுவோம். அதிற் பின்னதாகிய அறிவுமாத்திரம் நன்றாகப் புகட்டுவிக்கப்படுகிறதென்று அனேகமாகச் சொல்லலாம். ஆனால் அதிலும், 'இளமையிற்கல்' என்ற முதியோருரைப்படி நமது சிறுவர்கள் இளமையில் அறிவிலும், பொருளிலும் மனம்பயிலவேண்டியதை விட்டு, தெரியாத அந்நியபாஷையில், தலையும் வாலுமில்லாத வார்த்தைப் பயிற்சியிலேயே வெகுகாலம் கழிக்கும்படி நேரிடுகின்றதால், அத்தனை காலமும் பயன்தராமல் நஷ்டமாகவே போகின்றது. அத்தனை காலம் எப்போது நஷ்டமானதோ அப்போது அதற்குத்தகுந்த கைப்பொருளும் நஷ்டம், மன உழைப்பும் நஷ்டம். இவ்வளவு காலமும், பொருளும், பிரயாசையும் வீண்போகாமல் சிக்கனஞ்செய்து சிறுவர்களுடைய அரும்பிராயமான இளம்பிராயத்தை அறிவுபயிலுங்காலமாகச் செய்யவேண்டியது முறையும், அத்தியாவசியமுமன்றோ? அப்படியானால், அவ்வுத்தேசத்தைச் சாதித்துக் கொள்ளுவதற்கு வழியெப்படி? பாடசாலையில் வாசிக்கப் போகுமுன்னே வீட்டில் சிறுவர்கள் சுயமாகவே அறிந்திருக்கும் தங்கள் சுயபாஷையை அதற்காகஉபயோகப்படுத்திக்கொள்வதன்றோ உசிதமான மார்க்கம்? இதுவே மிகவும் எளிதானமார்க்கம். இதுவேகாலத்திற்கும், தேசத்திற்கும், இயற்கைக்கும், நியாயத்திற்கும், பாஷாபிமானத்திற்கும் ஒத்துவரும் மார்க்கம்! மேற்கூறிய நஷ்டத்திற்கெல்லாம் இதுவே நிவர்த்தியாகும். சுயபாஷையும் இதனாலேயே தலையெடுக்கும்! அங்கிலேயத்தில் பயிற்றுவிக்கும் அறிவைத்தானே சுயபாஷையிற் பயிற்றுவித்தாலென்ன? கனம்குறைந்து போகுமோ? அப்படிச்செய்வது கண்ணியக் குறைவென்று நினைப்பவர் சுயபாஷாபிமான மற்ற வெள்ளறிவாளரேயன்றி உண்மைப் பாஷாபிமானிகள் அப்படிநினையார். ஆகில், இதற்குச் சுயபாஷையில் தகுந்த நூல்களும் சில வார்த்தைகளும் தற்காலத்தி லில்லையேயென்று சிலர் வாதிப்பார்கள். இது முற்றும் உண்மையே என்று வைத்துக்கொண்டாலும், அது அப்பாஷைக்கோர் குறைவன்று. ஏனெனில் நூலெழுதும் நூலாசிரியர்மட்டும் கிடைக்கும் பக்ஷத்தில் இக்குறைவு ஏது? அங்கிலேய பாஷையே அப்படி நூலெழுதுவோரின் திறத்தினாலும், அவர் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கேற்றபடி அப்போதப்போது (Greek, Latin,) முதலிய பாஷைகளிலிருந்து புதிதாயேற்படுத்திக்கொண்ட வார்த்தைகளாலும் முன்னுக்கு வந்ததேயொழிய, அது தானாக வளர்ந்து வந்ததன்றே. பாஷையும் தாவர வர்க்கங்களைப் போலவே பேணினாலன்றி வளருவதன்றே. இதற்கு (Chaucer) என்னும் அங்கிலேய வித்வான் நூலெழுதியகாலத்தில் அங்கிலேய பாஷையினுடைய சிறுமையும் அதற்கு ௬ அல்லது ௫ நூற்றாண்டுகளுக்குள்ளாக அங்கிலேய நூலாசிரியர்களால் அது பெற்ற விரிவும் அமைப்புமே போதுமான திருஷ்டாந்தமாகும். ஆகையால், சுயபாஷையில் நூதன நூலெழுதுவோராவது, அல்லது அங்கிலேய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்துக் கொள்வோராவது இருந்தால், இக்குறைவு இருப்பினும் நீங்கி, சுயபாஷை ஆல்போல் தழைத்து வளர்ந்தோங்குமே. இங்கிலீஷ்க்கு கிரீக், லத்தீன் போலவே நமது சுயபாஷைகளுக்குச் சகாயமாக ஸம்ஸ்கிருதம் ஏற்பட்டிருக்கின்றது. அதன் உதவியில்லாமலே விர்த்தியடையக்கூடிய நமது தமிழுக்கு அதன் உதவியுமிருந்தால் விர்த்தியடையத் தடையென்ன ?

இத்தகைய நூல்கள் எழுதிப்பெருக்கிச் சுயபாஷையை வளரச்செய்வதற்கு யார் பொறுப்பாளிகளென்றால், எனது எளிய அபிப்பிராயத்தில் இது வரைக்

கும். இங்கிலீஷில் அறிவுபயின்று வித்தியா பட்டங்கள்பெற்ற கனவான்களே! இதற்கு அவர்களே கடமைப்பட்டவர்கள்! அவர்களே இந்தவேலைக்குத் துவஜங்கட்டிக்கொண்டு நிற்கவேண்டும்! தாங்கள் சுதேசத்து மகாஜனங்களின் திரவியசகாயத்தினால் அங்கிலேயத்தில் ஞானம்பெற்ற நன்றிக்கு, அவர்கள் இவ்விஷயத்தில் மகாஜனங்களுக்குச் செய்யவேண்டிய கைம்மாறு தங்கள்தலைமேல் பொறுத்த சுமையாக விருக்கின்றது. எப்படிப்பட்ட சாக்குச்சொன்னாலும் அந்தப்பொறுப்பு அவர்களைவிட்டு நழுவாது. 'சுதேசமித்திரன்' என்னும் பத்திரிகையிற் சொல்லியுபடி "இப்போது நமது தேசத்தில் படித்துத் தேர்ந்த சுதேசிகள் எல்லோரும் தங்கள் சொந்தப் பணத்தைச் செலவுசெய்து படிப்புக் கற்று முன்னுக்குவந்தவர்களல்ல. அவர்கள் தங்கள் கல்விப் பயிற்சிக்காகக் கொடுத்துவந்த சம்பளம் வெகு சுவற்பத் தொகை. கவர்ன்மெண்டார் கல்விப் பயிற்சிக்காக இப்போது செலவுசெய்யும் மொத்தம் அதற்கு எவ்வளவோ அதிகம். படிக்கும் சிறுவர்கள் சம்பளமாகக் கொடுக்கும் பணமொத்தம் வெகுசுவற்பம். இத்தேசத்து மகாஜனங்கள் செலுத்தும் பற்பல வரிப்பணத்தைக்கொண்டு கவர்ன்மெண்டார் அங்கங்கு பல பெருத்த பாடசாலைகளை ஸ்தாபித்து அவைகளில் மேலான உபாத்தியாயர்களை ஏற்படுத்திச் சுதேசிகளுக்குக் கல்விப்பயிற்சிசெய்து வருகிறார்களே யொழிய வேறில்லை. கவர்ன்மெண்டார் ஜனங்களிடத்திலிருந்து வரியாகப்பெறும் பணத்தைக்கொண்டு அங்கங்குபாடசாலைகளை ஏற்படுத்தி அனேகசுதேசச்சிறுவர்களுக்கு நல்ல கியானத்தையும் உயர்ந்த தெளிவையும் உண்டாக்கி வருகிறார்கள். இப்படி யெல்லாம் இத்தேசத்திய மகாஜனங்களின் பணத்தால் கியானத்தைப் பெறும் சுதேசிகள் அந்த மகாஜனங்களுக்குச் செய்யவேண்டிய கடமைஎன்ன? அதைச் சற்றாவது நமது தேசத்தில் படித்து மேலுக்கு வந்த சுதேசிகள் கவனிக்கிறார்களா? தீர்க்கமாய் ஆலோசிக்குங்கால், நமது தேசத்தில் படித்து முன்னுக்கு வந்தவர்களில்அநேகர்சொந்தப்பிரயோஜனத்தையே நாடி சற்றேனும் இத் தேசத்திய மகாஜனங்களை மனதில் நினைப்பதே யில்லை. தாங்கள் பெருத்த சம்பளம்வாங்கி வண்டி, குதிரை ஏறித் தங்கள் பெருமையைப்பாராட்டி வருகிறார்களே யொழிய வேறில்லை. அவர்களில் அநேகர் "நமக்கென்ன இத்தேசத்தியமகாஜனங்கள் எப்படிப் போனாலென்ன? நமக்கு கவர்ன்மெண்டிலிருந்து சம்பளமாகக் கிடைக்கும் காசில் ஒருபைசாகூட குறையாமல் கிடைத்தால் போதுமானது" என்று நினைக்கிறார்கள். இன்னும் சிலரோ, சும்மா இருப்பதை விட்டுவிட்டு உயர்ந்த பதவிக்கு வந்தபின்பு இத்தேசத்து ஜனங்களைப் பீடித்து லஞ்சம் வாங்கித் தங்கள் வயிற்றை நிரப்பிவருகிறார்கள். இவர்களுக்காகக் கவர்ன்மெண்டார் செலவுசெய்த பணமெல்லாம் கடலில் கரைத்த காயம் போலன்றோ ஆய்விடும்! இவர்களெல்லாம் இத்தேசத்திய பிரஜைகளுக்கும் துரோகிகள்; மஹாராணி அவர்களுக்கும் விரோதிகள். இப்போது இத்தேசத்து மகாஜனங்கள் சாதாரணமாய் எவ்வளவோ அக்கியானத்தில் மூழ்கிப் பலவாறாய்க் கெட்டுக் கிடக்கின்றார்கள். அவர்களுடைய தற்கால நிலைமை வெகு பரிதாபப்படத்தக்கது. அப்படியிருக்க, அவர்களுக்குக் கியானம்வரும்படி செய்து அவர்களுடைய க்ஷேமத்தைநாடி வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வது இவர்களுடைய கடமை அல்லவா? மகாஜனங்களின் பணத்தைக் கொண்டு பற்பல உயர்ந்த பரிக்ஷைகளைச் செய்துவிட்டு கவர்ன்மெண்டில் நல்லவேலைகளையும் பெற்று ஜனங்களுக்கு எவ்வித உபகாரமும் செய்ய முயலாமல் கவர்ன்மெண்டிடத்திலும் கூழைக்கும்பிடு போடுவது வெகுதுரோகமல்லவா? ஆகையால், இங்கிலீஷ் படித்துத் தேறின கனவான்கள் இனிமேலாவது தாங்கள் இங்கிலீஷில் அறிந்திருக்கும் அறிவைத் தங்கள் தங்களால் இயன்றமட்டும் தெரியாத பாமரஜனங்களுக்குச் சுயபாஷையில் மொழிபெயர்ப்பு மூலியமாகப் புகட்டுவது ஒருபெரிய அவசியமும் கடமையும் ஆமென்றுணர்ந்து நடப்பார்களென்று வேண்டிக்கொள்வோம். அப்படி அவர்களுக்கு நன்னோக்கம் வரும்படிக்குக் கடவுளும் அநுக்கிரகம் செய்வாராக!

இனி, அங்கிலேயம் படிப்பதற்கு மற்றொரு பிரயோஜனமாகின்ற காலக்ஷேபசங்கதியைப் பார்த்தாலோ, அதற்கும் இப்போது வழி முட்டுப்பட ஆரம்பித்து விட்டதென்று சிந்திப்பவர்க்கெல்லாம் தெளிவாய்த்தெரிகின்றது. இதைப்பற்றி இங்கு முற்றும் எடுத்துப்பேசப் போனால் உபந்நியாசம் விரிவுறுமென்றஞ்சி சுருக்கமாய்ச் சொல்லுவேன். ஆதியில் அங்கிலேயம் படித்துப் பட்டம் பெற்ற பட்டவர்த்தனர்க்குக்காலக்ஷேபமும் எளிதிற்கிடைத்துக்கொண்டிருந்தது. ஆனால் கவர்ன்மெண்டிலும் எண்ணிறந்த வேலைகளில்லை. அதற்கும் கணக்குவரையறையுண்டு. கவர்ன்மெண்டு வேலைத்தொகைக்கு அங்கிலேயம் படித்தவரின் தொகை மிஞ்சும்போது படித்தவர்பாடு அம்பலந்தான். இப்போது யூனிவெர்ஸிற்றியோ சிறுவர்களைப் பரீக்ஷையில் தேற்றிவிடும் வேலையை, வருஷா வருஷம் யந்திரம்போல வெகு ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டு வருகிறது. புதிய புதிய பரிக்ஷையெல்லாம் கால் நட்டுக்கொண்டு வருகிறது! பட்டம் பெற்ற பேர் தொகை தானப்பெருக்கமாய் வளர்ந்து வருகிறது! முன்சொன்னபடி கவர்ன்மெண்டிலும் எண்ணிறந்த வேலைகளில்லை! மீதியை ஊகித்துக் கொள்ளுங்கள்! இப்போது நம்மவர் சர்க்

கார் உத்தியோகத்திற்கென்று அங்கிலேயம்படிப்பது சோறற்றவீட்டில் சாப்பிடச்சொந்தவீட்டை விற்றுச் சுவர்ன இலை செய்து கொள்வதுபோல் இருக்கிறது! அங்கிலேயம் படித்து இப்போது வெளிவரும் வாலிபருக்குத் தாங்கள் படிப்பதற்குச் செலவான பணத்துக்கு வட்டியாவது படித்தான பின் கிடைக்கின்றதோ, என்று ஒருவர் வெகுசந்தேகாஸ்பதமாய்க் கேள்வி கேட்கிருர். அதற்குவிடை தெரிந்தபடி மொழிந்து பாருங்கள்! இவ்வளவு சந்தடிக்குள் சுயபாஷையென்பது அவர்களுக்கு எங்கேயோ பதருக்குள்ளே ஒளிந்துபோகிறது! அங்குங்கெட்டுஇங்குங்கெட்டவர் இவர்களே! கடைசியாக, அங்கிலேயத்தில் விற்பன்னரென்ற வெறும் பெயராவது நம்மவர்க்கு இருக்குமோ வென்ருல், அது அங்கிலேயரோ, சம்மதிக்காதது; நம்மவரோ கண்ணியம் செய்யாதது. இப்படியாக, இயற்கையில் நம் சிறுவர் புத்திகூர்மையுடையவராயிருந்தும், இப்போதுள்ள ஏற்பாட்டின் காரணத்தால், அது வெளியே வராமலாவது, பிரயோஜனப்படாமலாவது போய்விடுகின்றது. ஆகையால், இனியாவது யூனிவர்ஸிற்றி சம்பந்தமான கல்விச் சாலைகளில், தமிழை இன்னும் அதிகமாய்ச் சொல்லுவிக்க ஏற்பாடு செய்யும்படி, கவர்ன்மெண்டாரிடம் இந்துக்கள் யாவரும் சேர்ந்து விண்ணப்பம் செய்துகொள்ள வேண்டியது ஒரு பெரும் அவசியமான காரியம். இதுபார்த்தவுடன் வெகுமலைப்புத்தரும் காரியம்போலத் தோன்றும். ஆகிலும்,

'தெய்வத்தாலாகாதெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலிதரும்.'

'எண்ணிய எண்ணியாங்கெய்துப எண்ணியார்
திண்ணியராகப் பெறின்'

'ஊக்கமது கைவிடேல்'

என்ற இவ்வாக்கியங்கள் உலகத்தை ஆராய்ந்தறிந்த பெரியோரால் கூறப்பட்டதாதலால், எடுத்தகாரியம் நல்லகாரியமாய் இருக்கும்போது, 'திண்ணியோருக்கு' அது எளிதில் கைகூடுமென்பது நிச்சயம். இதுவரைக்கும் அங்கிலேயம் படித்தவர் எவரையாவது, அல்லது, படித்தும், உத்தியோகம் கிடையாத எவரையாவது கொண்டு இங்கிலீஷிலிருக்கும் சாஸ்திர சம்பந்தமான புஸ்தகங்களைத் தமிழில் மொழிபெயர்க்கச்செய்துஅந்நூல்களைப் பாடசாலைகளில் தமிழ்ப் பாடங்களாக வைக்கலாம். இதற்குத் தகுந்தஆதரவு மட்டும் இருந்தால் இந்த வேலையை மேற்போட்டுக் கொள்ளப் பல நூறுபேர் இப்போதும் ஆயத்தமாய் வருவார்கள் என்பதற்கு ஐயமில்லை. அதனல் வேறு அநேக குணங்கள் உண்டாவதோடுகூடி சிறுவர்களுக்கு அறிவும் விர்த்தியாகும், படித்தவருக்குப் படித்த அறிவும் பயன்படும். நாம் இங்கிலீஷ் கற்பதெல்லாங்கூடி அதிலடங்கிய அறிவுக்காகவே யன்றி, பாஷைக்காகவன்றே. இந்த விஷயத்தைப் பற்றி கவர்ன்மெண்டுக்காவது, 'யூனிவெர்ஸிற்றி ஸெனற்று' (University Senate) என்னும் வித்வ சபைக்காவது, எடுத்துப்பேசும் கடன் அச்சபையில் மெம்பராக (Member) விருக்கும் இங்கிலீஷிலும் தமிழிலும் தேர்ந்த சில பேர்போன வித்வான்களைப் பொறுத்ததாயிருந்தும், அவர்கள் அங்கிலேயப் பயிற்சியில் அமிழ்ந்து தலையறியாமல் தமோறிப் போனதனலோ, அல்லது தமிழ்ப் பாஷையில் அவர்களுக்கு முன்னிருந்த பற்று இப்போதுவர வர நெகிழ்ந்து வருவதனலோ, அல்லது யாது காரணத்தாலோ, ஏனோதானோவென்று இருந்துவிடுகிருர்கள். ஒரு சுயபாஷாபிமானி சொன்னதுபோல 'வித்தியாபிவிர்த்தி விஷயமாயுள்ள குறைவுகளை, வித்தியா பண்டிதர்களாய், வித்தியாசாலையிலேயே தங்கள் காலத்தைக் கழித்துவரும் இப்பேர்ப்பட்ட பண்டிதர்கள் தீர்க்காவிடின், வேறு யாருக்கு இதில் அக்கறை உண்டாகும்? இவர்கள் ஏற்கனவே பல பொது நன்மைகளின் பொருட்டு முயற்சித்து வருபவர்களாயினும், இது விஷயத்திலும் கடமைப் பட்டவர்களே" என்னைக்கேட்டால் இதிலும் பொறுத்த கடனும் இதிலும் பெரிய நன்மையும் அவர் தமது நாட்டுக்குச் செய்யவேண்டியதாய் மற்ருென்றும் இல்லை. இதுவே எல்லா நன்மைகளுக்கும் அஸ்திபாரம். ஆகையால் கனவான்களே, இப்போது அவர்களும் இவ்விஷயத்தில் அசட்டையாய் இருக்கின்றதனலே பின்பு இந்தக்கடமை யாரைப் பொறுத்தது? என்னுடைய எளிய அபிப்பிராயத்தில் இது யூனிவெர்ஸிற்றியில் பி. ஏ. முதலிய வித்தியா பட்டம்பெற்ற கனவான்களைப் பொறுத்தது. இவர்களே இந்த உத்தமமான காரியத்திற்குக் கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டியவர்! இவர்கள் எல்லோரும் இவ்விஷயத்தைப்பற்றி ஆற, அமரச் சிந்தனைசெய்து இதை நடத்தியே விடுகிறதென்று விரதம்பூண்டு ஒருங்குசேர்ந்து கவர்ன்மெண்டாரிடம் உண்மையாய்த் திண்மையாய் வேண்டிக்கொண்டால் இது விரைவில் நடபடியில் வரத்தக்க காரியமாகும். இது நிற்க, இனி தமிழ்ப் பாஷாபிவிர்த்திக்கு வேருெருபாயத்தைப் பற்றி ஆலோசிப்போம்.

(இன்னும்வரும்)

தி. லக்ஷ்மணபிள்ளை.

---

## ஸ்திரீகளுடைய அந்தஸ்தும் அதிகாரமும்.

பூர்வத்தில் நமது ஹிந்து ஸ்திரீகளுக்கிருந்த அந்தஸ்தையும் அதிகாரத்தையும் விளக்கிக்காட்ட திவான்பஹதூர் இரகுநாதராவ் அவர்கள் நமது

பூர்வ கிரந்தங்களிலிருந்து பல திருஷ்டாந்தங்களை யெடுத்துரைத்து சாஸ்திரோக்தமாய் அவர்களுக்கு ஆதியிலளிக்கப்பட்டு அவர்கள் அனுபவித்து வந்த பதவியை நிரூபித்து இங்கிலாந்தில் எழுதிய ஒரு கடிதத்தின் மொழிபெயர்ப்பைக் கீழே பிரசுரிக்கிறோம்: ஆதியில் ஷட்ரூபா என்கிற ஸ்திரீ சிருஷ்டிக்கப்பட்டாள். நமது சாஸ்திரக்காரராகிய மனு எக்காலத்தில் உலகத்தில் தோன்றினாரோ அதேகாலத்தில் அவளும் உலகத்தில் பிரவேசித்தாள். அவள் மனுவின் பெண்சாதி. அவரைவிட்டு இணைபிரியாமல் இருப்பாள். எல்லாச்சங்கதிகளிலும் அவருக்கு ஒரு மந்திரியைப்போல் புத்தி சொல்லுவாள். வீட்டில் யாதொரு நடவடிக்கையும் அவளுடைய சம்மதமும் அனுமதியும் இல்லாமல் நடத்தப்பட வில்லை. அவர்களுடைய புத்திரிகளில் ஒருத்தியாகிய தாவாறுதி என்பவள் கல்வியில் தேர்ந்தவள். மிகவும் மனைவிக்கு வேண்டிய நற்குணங்களை யெல்லாம் உடைத்தா யிருந்தாள். அவள் வீட்டிற்கு அவள்தான் எஜமானி. அந்த வீடு வெகு மேன்மையாயிருந்தது. தேவர்கள் கூட அவளைப்பார்த்துப் பொருமைப்பட்டார்கள். பூர்வீககாலத்தில் ஸ்திரீகள் உன்னத பதவியிலிருந்தார்கள் என்பதை ரூபிக்கும் பொருட்டு மனுஸ்மிருதியில் ஆதாரமுண்டு. ஆதிகாலத்தில் ஸ்திரீகள் தங்களுக்கு இஷ்டமிருந்தால் விவாகம் செய்து கொள்ளலாம், இல்லாவிட்டால் வேண்டியதில்லை என்கிற சுதந்தரத்தை உடைத்தாயிருந்தார்கள். ஒரு க்ஷத்திரியன் குமாரத்தியாகிய சுலுபை என்பவள் தகுந்த நாயகன் அகப்படாததினால் தபசு செய்யத் தலைப்பட்டு உலகத்தைத் துறந்து சந்நியாசியானாள். அவள் கல்வியில் தேர்ந்தவள்; ஒரு அரசனுடன் மதவிஷயத்தைப்பற்றிப் பிரசங்கித்து முடிவில் அவனைப்பார்த்து இவ்விதமாய்க் கூறினாள்: "இன்னமும் நீர் அக்கியானத்திலும் பாவத்திலும் முழுகியிருந்த போதிலும், அவைகளினின்றும் நீங்கி விட்டதாய்த் தப்பான அபிப்பிராயத்தைக் கொண்டிருக்கிறீர். நான் உம்முடைய க்ஷேமத்தில் கண்ணுடையவளாதலால் நீர் வீண் மனோராச்சியத்தில் காலத்தைப் போக்குகிறீரென்று சொல்ல வேண்டியதா யிருக்கிறது." இந்தக் கதையால் அக்காலத்தில் மனிதர்களும், ஸ்திரீகளும் சமமான சுதந்தரங்களை உடைத்தாயிருந்தார்களென்பது விளங்குகிறது. சாவித்திரி என்பவளும் கல்வியில் மிகுந்த தேர்ச்சியுடையவள். தான்தகுந்தகணவனை எளிதில் கண்டுபிடிக்கக் கூடாமல் அன்னிய தேசங்களுக்குச் சென்று, கடைசியாய் ஒரு அடைக்கலம் புகுந்தோனுடைய புத்திரனை நிச்சயித்தாள். அவள் பிதா அவள் பொறுக்கி யெடுத்த வாலிபன் ஒருவருஷங் கூடப் பிழைத்திருக்க மாட்டான் என்று தெரிந்து கொண்டு தன்னால் கூடியமட்டும்அவனைக்கலியாணம் செய்துகொள்ள வேண்டாமென்று தன்புத்திரிக்குப் புத்திசொல்லியும் அவள் அதற்கு உடன்படவில்லை. அவள் அவனை விவாகம் செய்துகொண்டு அவனைச் சாவினின்றும் மீட்கிறதற்குச் சக்தியுள்ளவளாயிருந்தாள். வடதேசத்தில் அவளுடைய சரித்திரம் எங்கும் பரவியிருக்கிறது. அத்தேசங்களில் கன்னிகைப் பெண் பெரியவர்களுக்கு வணங்கினால் "நீ சாவித்திரி ஆகக்கடவாய்" என்று வாழ்த்துவார்கள். போஜராஜனுடைய அரண்மனையிலிருந்த அநேகம் பண்டிதர்களில் ஒரு ஸ்திரியும் இருந்தாள். இனி இராமர் தான்வனவாசம்போகும்பொழுதுபத்தினியைஅயோத்தியிலேயே இருக்கும்படியாய்க் கேட்டதற்கு சீதாதேவி அம்மாள் "இவ்வுலகத்திலும் மறுவுலகத்திலும் ஒரு பெண்ணுக்குக்கணவனே துணைவன். கணவனே ஞானி" யென்று சொன்னாள். இந்த நூறுவருஷகாலமாய் 'மஹாரர்ணிஅகல்யாபாய் ஹோல்கார்' என்னும் பெயர் உலகத்தில் எல்லாருக்கும் தெரிந்ததாயிருக்கிறது. ஸர் ஜான் மால்கம் என்பவர் ஒரு புஸ்தகத்தில் அந்த அம்மாளைப்பற்றி இவ்விதமாய் எழுதியிருக்கிறார்: "இராஜாங்க விஷயங்கள் அதிக குழப்பமாயிருக்கும்பொழுதும் ஜனங்களுடைய மனது சஞ்சலப்பட்டிருந்து கொண்ட காலத்திலும் அவள் அநேகம் நாள் பயிரங்கமாய்க் கச்சேரி செய்தாள். அவள் இராஜ்ஜியபாரம் செய்தபொழுது சொற்ப தீர்வை விதிப்பதைப்பற்றி மிகுந்த கவனமுள்ளவளாயிருந்தாள். ஒவ்வொரு பிராஜையும் நேரில் விசாரிப்பாள். எல்லாரும் தடையன்றிப்போய்க் குறைகளைப் பற்றி முறையிட்டுக்கொள்ளலாம்." இது நிற்க,

ஹிந்து சாஸ்திரம் மனிதர்களுக்கு அனுகூலமாயிருப்பதாயும், ஸ்திரீகளை அவருடைய ஆயுள் நாளெல்லாம் மனிதர்களுடைய அடிமைகளா யிருக்கும்படி சொல்லுகிறதென்றும் அநேகம் கனவான்கள் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். அது தப்பிதம் என்பதை ரூபிப்பதற்காக மேற்சொல்லிய ஸ்திரீகள் கீர்த்தியே சாலும். உலகத்தில் எப்பொழுதும் பரவியிருக்கும்படி மிகவும் மேன்மையாய் ஸ்திரீகள் செய்து முடிக்க வேண்டிய கடமைகளை முடித்திருக்கிறபடியால், அவர்களை அடிமைகள் என்று நாம் சொல்லத் துணிவோமானால் அந்த அடிமைத் தனம் இக்காலத்திய சுயேச்சையைப் பார்க்கிலும் ஆயிரமடங்கு மேன்மையுடையது என்றுசொல்லலாம். ஏதோ தௌர்ப்பாக்கியத்தினால் இந்தியாவில் பாண்டவர் காலத்திற்குப் பிற்பாடு ஸ்திரீகள் தங்கள் சுயேச்சையைஇழந்துவிட்டார்கள். ௧௦-ம் நூற்றாண்டு வரையில் அவர்களுடைய நிலைமை நிரம்பக் கேவலமா யிருந்தது. பாரத வருஷத்தில் அநேகம் பெயர்பெற்ற ஸ்திரீகள் இருக்கிறார்கள். ஔவையாருடைய நூல்களும் அவளுடைய நிர்த்தோஷமான குணங்களும் அக்காலத்து இருடிகளுக்கும் அவளுக்குப் பின்னால் வருகிற

சந்ததிகளுக்கும் நற்குண நற்செய்கைகளைக் கற்பித்துக் கொண்டிருக்கின்றன. தமயந்தி ஓர் கீர்த்திபெற்ற ராஜஸ்திரீ. அவளுடைய குணங்களுக்காக அவளைப் பற்றி அநேகம் கவிகள் பாடியிருக்கிறார்கள். இக்காலத்திலேயே மேற்குத்திக்கில் ஒரு ஆரியஸ்திரீ உலகத்திற்கெல்லாம் நீதி கற்பிக்கிற ஓர் விளக்குப் போல் விளங்கிக் கொண்டிருக்கிறாள். அவள் சிறு பெண்ணா யிருந்தபொழுது கல்வி கேள்விகளால் நன்றாய்த் தேர்ந்தவள். கலியாணம் செய்துகொள்வதில் மிகுந்த புத்திசாலித்தனத்தைக் காட்டினாள். கணவனிடத்தில் வெகு பிரியமுள்ளவள். தற்காலத்தில் பிள்ளைகளிடத்தில் பக்ஷமுள்ளவளும் பிள்ளைகளைத் தகுந்த மார்க்கத்தில் கொண்டுவரத்தக்கவளாயும் இருக்கிறாள். அவளுடைய நற்குண நற்செய்கைகளோ சொல்லித் தொலையா. அவள் ஸ்வாமியுடைய பக்தியுள்ள அடிமை. அதிக யுக்தி புத்தியை உடைத்தாயிருக்கிறவள். எப்பொழுதும் தொந்திரவு கொடுக்கத்தக்க ஜனங்களின் ராஜ்ஜியத்தை ஆண்டுகொண்டு வருகிறாள். ஆனால் ராணுவ பலத்தினால் மட்டும் அல்ல, அந்த ஜனங்களுடைய பிரியத்தைச் சம்பாதிப்பதில் தன்னுடைய சுதேசத்தில் சமாதானமாய் இராஜ்ஜிய பாரம் செய்கிறாள். அந்நிய தேசங்களிடத்திலும் சண்டை சச்சரவு இல்லாமல் பாதுகாத்து வருகிறாள். எப்பொழுதும் ஸ்வாமியுடைய கிருபையையே நம்பினவள். அவளுடைய பெயர் எல்லாருக்கும் தெரிந்திருக்கிறது. விக்டோரியா மஹாராணி என்னும் பெயரைச் சொன்னாலும் கேட்டாலும்அளவிறந்த சந்தோஷம் உண்டாகிறது. இந்தியாவில் இந்தச் சமயம் சொல்லத்தகுந்த ஸ்திரீ மற்றொருத்தி உண்டு. கஸிம்பெஸார்நாட்டுமகாராணிசோர்ணமாயி ஒரு மேன்மையான ஆரியஸ்திரீ. இக்காரணங்களால் இந்தியாவில் ஸ்திரீகள், புருஷர்களைப் பார்க்கிலும் தாழ்ந்தவர்கள் அல்லவென்று ஸ்பஷ்டமாய்ப் படுகிறது. குடும்பத்தில் ஸ்திரீஜாதி மேன்மையான பதவியையுடைத்தாயிருந்தாள். இராஜாங்க விஷயத்தில் மாத்திரம் தான் அவளுடைய அதிகாரம் சில சமயங்களில் குறைக்கப்பட்டது. அவள்,மற்றக்காலங்களில் நாடுகளை ஆண்டிருக்கிறாள். இராஜாக்களுக்குப் புத்தி சொல்லுவாள். சண்டையில் சேர்ந்து சைனியத்தை நடத்துவாள். வீட்டில் அவள் ஒருவருக்கும் கீழ்ப்பட்டவளல்ல. பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பும் வரையில் அவள் தான் உபாத்தியாயர். அவர்களுக்கு இரகசியம் வைத்துக்கொள்ளும் சக்தியில்லாததினால் வேதத்தின் ஆதியை யவர்களுக்குச் சொல்ல வில்லை. ஒருமனிதனுக்கு மதத்தில் பக்தியுண்டு பண்ணுவதற்கு அவள் ஒரு பான்மை காரணம். எக்காலத்தில் ஆரியர்கள் தங்கள் ஸ்திரீகளை யவமதித்தார்களோ அப்பொழுது தான் அவர்கள்மெலிமை யடைய ஆரம்பித்தார்கள். மறுபடியும் நாம் நம்முடைய ஸ்திரீகளைத் தகுந்த நிலைமையில் கொண்டுவர முயன்றால் நாம் முன்போல உன்னத பதவிக்கு வருவோம்.

## விசேஷக் குறிப்புகள்.

**பார்லிமேந்து சபை.**

ஜூலை மாசம் பிறக்கு முன் அங்கிலேய பார்லிமெந்து சபை கலைக்கப்பட்டுபுதுப்பார்லிமெந்து நியமிக்க எலெக்ஷன்நடக்க உத்திரவாய்விட்டது. பார்லிமெந்து சபையென்பது 'லார்ட்ஸ்' (பிரபு ஜனர்) 'காமன்ஸ்' (சாதாரணர்) என இருவகுப்பாருடைய சபைகள் சேர்ந்தது. 'லார்ட்ஸ்' சபையில் அங்கிலேய மகா நாட்டுப்பிரபுக்கள் பரம்பரை பாத்தியமாக மெம்பர்களாக விருந்து சட்ட நிர்மாணம் செய்து வருவார்கள். காமன்ஸ் சபை யென்பது ஜனங்கள் தாங்களாக தங்களுக்குள் தக்கவரைத் தங்களுக்குப் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுத்து நியமிக்க அப்படிப்பட்ட பிரதிநிதிகள் எல்லாரும் கூடும் சபையாம். லார்ட்ஸ் சபை அந்தஸ்தில் மேலானதாக விருந்தாலும் அதிகாரத்திலும் செல்வாக்கிலும் ஜனப்பிரதி நிதிகளடங்கிய சபையாகிய 'காமன்ஸ்' சபையே மேம்பட்டது. சட்ட நிர்மாணம் செய்யும் அதிகாரம் இருசபையாருக்கும் பொதுவாக வுள்ளதேயாயினும், அரசிறை வருமானத்தை நிதானித்துத் துரைத்தனச் செலவுக்கு வேண்டிய தொகை யாவற்றையும் செலவிட அனுமதி கொடுக்கும் அதிகாரம் 'காமன்ஸ்' சபை யாருக்கே உண்டு. இப்படி பணப்பையில் பிடிப்பிருக்கிற படியால் அந்த இசைவைக்கொண்டு 'காமன்ஸ்' சபையார் தங்களுடைய குறைகளை யெல்லாம் நிவர்த்தித்துக் கொள்வதோடு தங்கள் கோரிக்கைகளையும் நிறைவேற்றிக் கொள்ளும் வழிகளைச் சித்தமாய்த் தேடிக்கொள்கிறார்கள். முறைப்படி சட்ட நிர்மாணம் செய்ய 'காமன்ஸ்' சபை, லார்ட்ஸ்சபை, அரசு என்னும் மூவகை யங்கத்தினரும் சேர்ந்து சம்மதிக்க வேண்டியது அவசியமே யாயினும், இம்மூவங்கத்தினரில் ஒருவருக்கொருவர் எந்த விஷயத்திலாவது பேதமுண்டானால் காமன்ஸ் சபையார்க்குள்ள அதிகசெல்வாக்கினாலும் பணப்பையில் பிடிப்பிருக்கும் அதிகாரத்தினாலும் அவர்கள் ஒருமனதாகத் தீர்மானித்ததே கடைசியில் நிறைவேறி வருகிறது. இவர்கள் ஜனங்களுடைய பிரதிநிதிகளாதலாலும் இவர்களைநியமிக்கு மதிகாரம் ஜனங்களுக் கிருப்பதாலும், ஜனங்கள் ஒரு மனதாகத் தீர்மானிக்கும் எந்த விஷயத்தையும்அவர்கள் விடாப்பிடியாகக்கொண்டுநிறைவேற்றிக்கொள்ள விரும்பினால் அப்படி செய்வது கடைசியில் எப்படியும் சாத்தியமானதே. இப்படியாக அரசோடு குடிகளும் சேர்ந்து துரைத்தனம் செலுத்தும் முறைக்குப் பிரதிநிதி துரைத்தனம் என்று பெயர். இதைப்பற்றி விவரித்துரைக்க இங்கு இடம் போதாது. இப்பொழுது நாம் சொல்லவந்தது

இப்பார்லிமெந்து சபை கலைவுற்று புதுப்பார்லிமெந்து சபை நியமகம்சேர்ந்த விஷயமே. மேலே கூறியபடியுள்ள பார்லிமெந்து சபை 7-வருஷங்களுக்கு ஒருதரம் தானுகக் ககலைந்து மறுபடியும் புதிதாய்க் கூட வேண்டுமென்று சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதற்குமத்தியில் 'காமன்ஸ்' சபையாருக்கும் மற்ற இரண்டு இராஜ அங்கத்தினர்களுக்கும் வித்தியாசம் நேர்ந்தாலும், அல்லது புதிதாக ஒருவிஷயத்தைப்பற்றி ஜனங்கள் கருத்தை யறிந்து கொள்ள வேண்டியது யுக்தமாகத் தோன்றினுலும் பார்லிமெந்து சபையைக் கலைத்துவிட்டு புதிதாகப் பார்லிமெந்து சபைகூடும்படி கட்டளையிட அரசுக்கு அதிகாரமுண்டு. இப்படி எந்தக் காரணத்தால் பார்லிமெந்து சபை கலைந்து புதிதாகநியமிக்கப்பட்டாலும், பார்லிமெந்து சபை நியமனம் நடப்பதற்கு'ஜெனரல் எலெக்ஷன்' என்று சொல்லப்படுகிறது.

**ஜெனரல் எலெக்ஷன்**

இப்பேர்ப்பட்ட ஜெனரல் எலெக்ஷன் ஒன்று இந்த மாச முதலில் நடந்தது. இங்கிலாந்து, ஸ்காத்லாந்து, வேல்ஸ், ஐர்லாந்து என்னும் எல்லாநாடுகளும் சேர்ந்த ஐக்கிய நாட்டார் மொத்தமாகத் தங்களுக்கு 670-பிரதிநிதிகள் நியமிக்க அதிகாரம் பெற்றிருக்கிருர்கள். ஒவ்வொரு மாகாணமும் பார்லிமெந்து மெம்பர் நியமனத்துக்காக ஒன்று அல்லது பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவுக்கும் அதன் ஜனத்தொகை விஸ்தீரணத்துக்குத் தக்கபடி ஒன்று அல்லது இரண்டு மெம்பர்களை நியமிக்க அதிகாரம் உண்டு. ஒவ்வொருபிரிவிலும் பார்லிமெந்து மெம்பர் நியமனம் செய்வதில் அபிப்பிராயம்கொடுக்கச் சுதந்திரமுள்ளவர்கள் பேர்களெல்லாம் ஜாபிதாப் போட்டுச் சரியாகத் தயார்செய்திருக்கும். மெம்பர் நியமனத்துக்குரிய காலமாக நியமிக்கப்பட்ட தினத்தில், இவர்கள் ஒவ்வொருவரும் மெம்பர் நியமன ஸ்தானத்துக்குச்சென்று மெம்பராகவர இஷ்டப்பட்டு நிற்பவர்களில் அவரவர்களுக்கு இஷ்டமானவர்கள்பேரை ஒருகாகிதத்தில் குறித்து அங்குள்ள ஒரு பெட்டியில் போட்டுவிட்டு வந்து விடுவார்கள். இப்படி யெல்லாரும் போட்டானபின் பெட்டியைத்திறந்து யார்பேருக்கு மிகவும்அதிகப்படிச்சீட்டுகளிருக்கின்றனவோ அவர் மெம்பராகநியமிக்கப்பட்டவராவர்.இப்படியாகஇந்த மாசமுதலில் ஆரம்பித்த நியமன வேலை இந்தமாசம் 30௳ முடிவுக்கு வந்தது.

**மிஸ்டர்டாடாபாய் நௌரோஜி.**

இந்தஎலெக்ஷனில் நமக்குப் பெருமை தரும் ஒரு முக்கிய விசேஷ மென்ன வென்ருல் நம் தேசத்தவரும் பம்பாய் நகரவாசியுமாகிய மிஸ்டர் டாடாபாய் நௌரோஜி யென்பவர் 'பின்ஸ்பரி' மாகாணத்தின் மத்திய பிரிவுக்குப் பார்லிமெந்துசபைமெம்பராக நியமிக்கப்பட்டதே. இவர் மெம்பராக நியமிக்கப்பட்ட நாளது௴ 6௳யானது நமக்குள் என்றென்றைக்கும் கொண்டாடப்படதக்க சுபதினமாம். மகாராணியார் 1858-ம் வருஷம் இந்தியா இராஜாங்கத்தைத் தாம் நேரில் ஒப்புக்கொண்ட போது வெளிப்படுத்திய விளம்பரப் பத்திரத்தில் இந்திய பிரஜைகள் தம் செங்கோலுக்குட் பட்டமற்றப் பிரஜைகளைப்போல் எல்லாவித சுதந்தரங்களுக்கும் வித்தியாச மின்றிபாத்தியப்பட்டவர்களாக விருப்பார்களென்றும், அவர்எல்லாரையும் வித்தியாச மின்றி ஒரே சீராகப்பாவித்துப் பரிபாலித்து வருவாரென்றும் சொன்னது முற்றும் நியாயத்தில் நிறைவேறினது அன்றைக்கே.

---

**இந்தியர்வில் கொண்டாட்டம்.**

மிஸ்டர் டாடாபாய்நௌரோஜியவர்கள் பார்லிமெந்துமெம்பராக நியமிக்கப்பட்டதை யறிந்து இந்தியாவிலுள்ள ஜனங்கள் அடைந்த சந்தோஷத்துக்கும் அவர் நியமனத்தை அவர்கள் கொண்டாடும் கொண்டாட்டத்துக்கும் அளவு சங்கையில்லை. இந்தியாவிலுள்ள ஒவ்வொரு முக்கியபட்டணத்திலுமுள்ள ஜனங்கள் பொதுக்கூட்டம்கூடி அவருக்குச் சந்தோஷ முகமன் கூறி அவரை நியமித்த எலெக்டர்களுக்குவந்தனமளித்துத்தீர்மானங்கள் செய்து இங்கிலாந்துக்குச் சமாசாரமனுப்பி வருகிருர்கள். இந்த௴ 22௳ பம்பாயில் இது விஷயமாக ஒரு பெரிய மகாநாடு கூடி மேற்கண்டபடி தீர்மானங்கள்செய்து அவர் நியமன விஷயத்தைக்கொண்டாடினுர்கள். ஆகஸ்டு௴ 1௳ சென்னையிலும்இதற்காக ஒரு பெரிய மகாநாடு கூடும். அங்கிலேயர் ஆளுகையின் கீழ் நாம் பெற்றனுபவித்துவரும் எல்லாப்பாக்கியங்களிலும் இது மிகவும் மேலானது.அங்கிலேயர் நமது தேசத்தைக் கட்டிக்கொண்டது முதல் நமக்குச்செய்து வரும்அளவற்ற நன்மைகளுக்கு நாம் அவர்களுக்கு என்றென்றைக்கும் தலைமுறை தலைமுறையாக நன்றிசெலுத்திவருவது நமது தேசத்தார் கடமையே.

---

**புதுப்பார்லிமெந்து சபை கூட்டம்.**

புதிதாய்நியமிக்கப்பட்டபார்லிமெந்து மகாசபை ஆகஸ்டு௴ 5௳ கூடும். அன்று புதிதாய் நியமிக்கப்பட்ட மெம்பர்களெல்லாம் பிரமாணிக்கம் எடுத்துக்கொண்டு பார்லிமெந்து சபையிலுள்ள புஸ்தகத்தில் கையெழுத்து வைத்துவிட்டு மெம்பர்களாக உட்காருவார்கள்.

**மிஸ்டர்டாடாபாய் பிறப்பு வளர்ப்பு.**

புதிதாகப் பார்லிமெந்துசபை மெம்பராக நியமிக்கப் பட்ட டாடாபாய் நௌரோஜிபார்ஸி ஜாதியைச் சேர்ந்தவர். 1825-ம் வருஷம் ஸெப்டம்பர்௴த்தில் பம்பாயிற் பிறந்தார். பள்ளிக்கூடத்தில் வெகு சூடிகையும் சுறுசுறுப்புமுள்ளவராக விருந்தார். அவர்காலத்திலிருந்த உயர்ந்த வித்தியா சாலையில் முற்றும் படித்துத்தேறினபின் அப்பொழுது பம்பாய் ஹைகோர்ட்டு சிரேஷ்ட நீதியதிபராயிருந்த, 'ஸர் எர்ஸ்கைன் பெர்ரி' என்பவர் அவருடைய புத்தி சாமர்த்தியத்தையும் படிப்பு வல்லமையையுமறிந்து அவனை இங்கிலாந்துக்குப் படிக்க அனுப்பத் தீர்மானித்தார். ஆனால் அப்பொழுதுள்ள பார்ஸி சிரேஷ்டர்கள் டாடாபாயை இங்கிலாந்துக் கனுப்பினால் கிறிஸ்தவர்களாக்கி விடுவார்களென்று பயந்ததால் அனுப்பக் கூடவில்லை. மிஸ்டர் டாடாபாய் வித்தியாசாலையை விட்டதும் பள்ளிக்கூட உபாத்தியாயராக அமர்ந்து கொஞ்சகாலத்தில் பம்பாயிலுள்ள முதல்தர வித்தியாசாலையாகிய 'எல்பின்ஸ்டோன் காலேஜில்' கணிதசாஸ்திர பண்டிதராக வந்தார். அந்த வேலைக்கு அதுவரையில் மிகவும் கற்றுத்தேர்ந்த ஐரோப்பிய பண்டிதர்களையே நியமித்து வந்ததால் அவ்வேலைக்கு இவனை நியமித்தது இவருக்கும், சுதேசிகளுக்கும் ஓர் பெருங் கீர்த்தியேயாயிற்று. அவ்வேலையி லிருக்கையில் பம்பாயில் பொதுஜனப் பிரயோஜனமான பல விஷயங்களில் முன்னின் றுழைத்துப் பொதுஜநோபகாரியென்று பேர்பெற்றார். 1855-ம்வருஷத்தில் இவர் காமா என்னும் பேருடைய பிரபலம் பெற்ற பம்பாய் வியாபாரிகளோடு கூட்டாளியாகச்சேர்ந்து இங்கிலாந்தில் சுதேச வியாபார சங்கமொன்று ஏற்படுத்தி வியாபாரம்செய்யவென்று சீமைக்குப் புறப்பட்டுச்சென்றார். அப்போதப்போது சொந்தக்காரியார்த்த மாகவும் வியாபாரார்த்தமாகவும் நடுவில் இந்தியாவுக்கு வந்த காலங்கள்போக மொத்தம் 30 - வருஷகாலம் இங்கிலாந்திலேயே வாசமாயிருந்துகழித்திருக்கிறார். இந்தியா துரைத்தன விஷயத்தைப் பற்றியும் இத்தேச வளப்பம் இத்தேசத்தார் நிலைமை இவைகளைப் பற்றியும் வியாபார வர்த்தக சம்பந்தமான பல முக்கிய விஷயங்களைப்பற்றியும் இவர்தீரத்தெளிய ஆராய்ந்து எழுதிய பிரபந்தங்கள் அவ்விஷயங்களில் மிகவும் ஆதாரமான கிரந்தங்களாக விருக்கின்றன. துரைத்தன ஞானத்திலும், இந்தியா தேச வளப்ப விர்த்தாந்தங்களிலும் இவருக்கு மேலானஅறிவுடையார் இந்தியாவில் வேறுயாருமிலர். அங்கிலேய துரைத்தன சம்பந்தமான விஷயங்களையும் இவர்நன்றாகத்தீரத் தெளியஅறிந்திருக்கிறார். இவர் நடுவில் பரோடா திவானாகவிருந்து கலைபைப் படாதிருந்த அந்நாட்டுத் துரைத்தனத்தைச் சீர்படுத்தி நல்ல பேரும் கீர்த்தியும் பெற்றார். பின்னர் பம்பாய்நகர் முனிசிபல் சங்கத்தில் மெம்பரா யிருந்து முனிசிபல் சீர்திருத்தங்கள் பல நிறைவேற்றுவதற்குக் காரணபூதராயிருந்தார். பிற்பாடு லார்ட் ரே பம்பாய் கவர்னராகவிருந்த காலத்தில் பம்பாய்சட்டநிரூபண சபை மெம்பராக நியமிக்கப் பெற்று அங்கும் மிக உபயோகமுள்ளவரென்று கீர்த்திபெற்றார். சென்ற 6-வருஷகாலமாய் பார்லிமெந்து சபையில் ஒரு மெம்பராக வேண்டுமென்று விடாபிடியாக முயற்சித்து கடைசியில் "முயற்சி திருவினையாக்கும்" என்னும் உண்மைவாக்குப்படி பார்லிமெந்து மெம்பராக நியமிக்கப்படும் ஒப்பற்ற பாக்கியம் பெற்றார். இப்பேர்ப் பட்ட ஒருவர்நமதுதேசத்தவராக விருப்பது நமக்குப் பேருங்கீர்த்தியே.

---

**புதுஹைகோர்ட்டுகட்டடங்கள்**

இந்தமாசம் சென்னையில்நடந்த மிக முக்கியமான சம்பவங்களிலொன்று சென்ற மூன்று வருஷகாலமாகக்கட்டிவந்த ஹைகோர்ட்டு ஸ்மால்காஸ்கோர்ட்டு கட்டடங்கள் திறக்கப்பட்டதே. கனம்பொருந்திய கவர்னர் அவர்கள் நாளது௴ 12௳ வெகு ஆடம்பரங்களோடு கிரகப்பிரவேச சடங்குசெய்து மேற்படி கட்டடங்களை முறைப்படி திறந்தார். சென்னையிலுள்ள கட்டடங்களெல்லாவற்றிலும் இப்புதியகட்டடங்கள் அழகிலும்வேலைப்பாட்டிலும் சிறந்தவையாக் விளங்குகின்றன. இந்தியாவிலுள்ள அழகமைந்த வேலைப்பாட்டுக்குப் பேர்போன கட்டடங்களில்இக்கட்டடம் முதலான ஒன்றாகக் கொண்டாடப் படத்தக்கதாம்.

---

## அறிவைப்பரவச்செய்யும் சபை உபகார சங்கம்.

நமது திருவனந்தபுரம் உபகாரி பின் வருமாறு எழுதுகிறார்:—

இரண்டுபேர் தாங்கள் வேண்டிக்கொள்ளப்போகிற எந்த காரியத்தைக் குறித்தாகிலும் பூமியில் ஒருமைப்பட்டிருந்தால் அந்தக் காரியம் ஈசுவரனால் அவர்களுக்கு லெபிக்குமென்று நமது வேதத்தில் சொல்லியிருக்கிறது. தாங்கள் அறிவைப்பரவப்பண்ண எடுத்திருக்கிற காரியத்தில் பலருடைய ஐக்கியம் இருப்பதினால் இந்தியாவில் தமிழ் பாகத்தில் பரவி விருத்தியாகுமென்பதில் சந்தேகமில்லை.

தாகித்தவன் தண்ணீரையும் பசித்தவன் ஆகாரத்தையும் எப்படி உட்கொள்ளுவானோ அப்படியே இந்த விவேக சிந்தாமணியின் மதுரவசனத்தை உட்கொள்ள வேண்டும். இப்போது உட்கொண்டும் வருகிறார்கள். அமிர்த துல்லியமான அந்த வார்த்தைகளை ஆமூலமாய் கிரகிக்கிறதற்கும் அதை பரம தனமாய் கைக்கொள்ளுகிறதற்கும் உபயோகமாய்த்தீரும். விவேகசிந்தாமணி வாடாத புஷ்பமாயிருக்கிறது.

மழைமேகம் மழையைப் பெய்வது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாய் இதில் சேர்ந்த உபகாரிகள் உதவிசெய்து வரவேண்டும்.

பொறுமையோடு தைரியத்தையும் கூட்டிக்கொள்ளவேண்டும்.

---

**ஆறுமுகநகரி கிளைச்சங்கம்.**

சென்னையிலுள்ள அறிவைப் பரவச்செய்யும் சபை உபகாரி ஒருவர் கழிந்த கோடை விடுமுறை காலத்தில் திருநெல்வேலிக்குப் போயிருக்கையில் நமது சபை விஷயமாக குத்தாலம்முதலிய இடங்களுக்குச்சென்று சுற்றி வந்ததோடு ஆறுமுகநகரியென்னும் கிராமத்தில் நமது ஏற்பாட்டுப்படி 'ஞானபிவிர்த்திசபை' யென்று ஒரு கிராமசபை யேற்படுத்தி வந்திருக்கிறார். அச்சபையார் முதலெடுப்பில் விவேகசிந்தாமணியும், சுதேசமித்திரனும் வாங்கி வாசித்து வருகிறார்கள்.

---

**இராமமந்திரம்**

திண்டிவனம் தாலூகா இராமமந்திரத்தி லிருந்து ஒருவர் அறிவைப்பரவச்செய்யும்சபை உபகாரியாக விருக்க இசைந்து சென்ற சஞ்சிகையில் நாம்வெளியிட்ட உறுதி நாமா பத்திரிகைப்படி கையெழுத்துசெய்து அனுப்பியிருக்கிறார். இன்னும் சிலர் உறுதிநாமா எழுதியனுப்பி யிருக்கிறார்கள். மற்றவர்களும் சீக்கிரத்தில் உறுதிநாமா எழுதி யனுப்புவதோடு, அவரவர்க ளிருக்குமிடங்களில் அறிவைப் பரவச்செய்ய அவர்களெடுத்துக் கொள்ளும் முயற்சி யின்னதென்பதைச் சுருக்கமாய் நமக்கு எழுதித் தெரிவிப்பார்களென்று கோருகிறோம்.

---

**திருவனந்தபுரம் கிளைச்சபை.**

திருவனந்த புரத்தி லிருந்து நமக்குப் பின்வரும் ரிபோர்ட்டு வந்திருக்கிறது:—

திருவனந்தபுரத்தில் ஸ்தாபகமா யிருக்கும் "அறிவைப் பரவச்செய்யும் சபை" யின் கிளைச்சபை மறுபடியும் ஆனிமீ 14, 21, 28, ஆடிமீ 4-தேதிகளாகிய பிரதி ஞாயிறுகளிலும் ம-ா-ா-ஸ்ரீ, பென்ஷன் ஓவர்சியர்-அரங்கநாதபிள்ளை அவர்கள் வீட்டில் கூட்டங்கள் கூடின.

2. இந்த ஞாயிற்றுக்கிழமைக்கு முந்தின ஞாயிறுகளில் 20, 25, 30 பேர்கள்வரையில்தான் கூடினார்கள். இதற்கு மேலில்லை.

3. இந்தக்கிழமையிலோ மாணாக்கர்களில் 25-ம் பெண்குழந்தைகளில் 3-ம், பெரியோர்களில் 25-ம் ஆக 53-பேர்கள் கூடினார்கள்.

4. அக்கிராஸனத்தை ஹைகோர்ட்டு வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ சேஷய்யங்கா ரவர்கள் வகித்தார்கள். ம-ா-ா-ஸ்ரீ சுப்பராயப்பிள்ளை அவர்கள் கல்வியைக் குறித்துப் பிரசங்கித்தார்கள். "விவேகசிந்தாமணியில்" உள்ள "தமிழ்ப்பாஷை" என்னும் தலைப்பெயர்கொண்ட தொருவிஷயமாய் சீப் இஞ்சினியர் ஆபீஸ் ஹெட் குமஸ்தா ம-ா-ா-ஸ்ரீ T. சுப்பய்யாபிள்ளை அவர்கள் வாசிக்க, ஓவர்சியர் அரங்கநாதபிள்ளை அவர்கள் அர்த்தம் சொன்னார்கள். திருச்சினாப்பள்ளி துரைசாமிஅய்யரவர்கள் சன்மார்க்கத்தைக் குறித்துப் பிரசங்கித்தார்கள்.

5. முந்தின ஞாயிறில் சொல்லி யிருந்தபடி மாணாக்கரில் குழந்தைவேலுபிள்ளை கல்வியினால் உண்டாகும் பயனைக்குறித்துச் சுருக்கமாய் எழுதி வாசித்தார். அப்பால் இக்கூட்டத்தில் இருந்த ப்ளோஸ்கான் சாகிபு என்ற ஒரு மகமதியர் இந்துஸ்தானியில் கெம்பீரமாய்ப்பாடினார். கொஞ்சநேரம் சொரபித்து என்று சொல்லப்பட்ட வாத்தியத்தை ஆறுமுகம்பிள்ளை அவர்கள் வாசித்தபிறகு, கொஞ்சநேரம் செண்பகராமம்பிள்ளை அவர்களும் வாசித்தார்கள். இப்படியே தம்புராயும் ஒருவர் மாற்றி ஒருவர் வாசித்தார்கள்.

7. அந்த பிளோஸ்கான் சாகிபு பாடின பாஷை கெம்பீரமான இந்துஸ்தானி யானதால் அதற்கு ஸ்வபாவமே கெம்பீரம். அந்த கெம்பீரத்துக்கேற்ற சொரபித்து வாத்தியமும் கெம்பீரமானதினாலே தம்புரு தொனியோடுகூட மூன்று தொனியும் இசைந்து ஐக்கியப்பட்டதினுண்டான கானதொனியின் அதிமதுரத்தை செவிவழியாய் ஆத்மா உட்கொண்டு திருப்திகரமான சந்தோஷத்தை அடைந்தது.

இக்கூட்டமானது பகல் 4 - மணிமுதல் 6 - மணிவரை நடத்தப்பட்டது.

8. இப்படியே B. A., லெக்ஷ்மணபிள்ளை அவர்களும் ஒரு சங்கத்தைக்கூட்டி நடப்பிவித்து வருகிறார்கள்.

9. இன்றுகூடின கூட்டத்திற்கு அதிதியாய் வந்திருந்த சென்னப்பட்டணம் ம-ா-ா-ஸ்ரீ T. P. சுந்தரமய்யரும் இங்கு நடந்த உபந்யாஸம், வாத்திய முதலானவைகளைக் கேட்டு ஆனந்தமடைந்து இந்த "அறிவைப் பரவச்செய்யும் சபை" விஷயமாய் இவ்வூரில் ஸ்தாபித்திராநின்ற லண்டன்மிஷன் புஸ்தகசாலையில் ஷை தேதி இரவு 7-மணிமுதல் 8-வரையில் பிரசங்கித்தார்.

10. "அறிவைப் பரவச்செய்யும்சபை"யின் காரியதரிசிம-ா-ா-ஸ்ரீ ஸி.வி. சாமிநாதய்யரவர்கள் இது விஷயத்தில் எடுத்துக்கொண்ட சிரமம் நாள் ஏற ஏற கூட்டமுமேறுமென்று சித்தாந்தப்படுத்த அஸ்திபாரமும், மூலைக்கல்லும் போடப்பட்டிருக்கிறது.

**எடப்பள்ளி.** நீலகிரி ஜில்லா எடப்பள்ளியில் அறிவைப் பரவச்செய்யும் சபையின் உபகாரியாக விருக்கும் நண்பர் பின்வருமாறு எழுதுகிறார்:—

"சென்ற மாதங்களினுடைய 'விவேகசிந்தாமணி'யைப் பார்க்கப் பார்க்க ஆசையொழியாமல் திரும்பத் திரு[illegible]ப்படித்து சலியாமல், சதாகாலமும் கையில் வ[illegible]த்துக்கொண்டே படித்து ஆனந்தம் அடைவதுடன் இந்த ஊரிலுள்ள சத்ஜன சங்கத்தின் மெம்பர்களுக்கும் மற்றவர்களுக்கும் படித்துக் காட்டி விளக்கிக்கொண்டும் வருகிறேன். ஒவ்வொரு நண்பரும், இதைப்போன்ற பத்திரிகைகாண்பது அரிதரிது என்றும், தங்களுக்கு அறிவு மென்மேலும் பெருகுவதற்கு இப்பத்திரிகை யன்றி மற்றொன்று முதவாதென்றும் சொல்லி, ஆனந்தமடைகிறார்கள். நேற்று யான் 'இனித்துறை' என்னும் கிராமத்தில் சுமார் நூறு ஜனங்களுக்கு மத்தியில் படுகர் சீர்திருத்தத்தைப்பற்றிப் பிரசங்கம் செய்யும்பொழுதும் நமது அருமை விவேகசிந்தாமணியின் பெருமையையும் அதையின்றிக் கிராம வாசிகளுக்கு அறிவு விருத்தியாகாதென்றும் சொல்லச் சமயம் நேர்ந்ததைப்பற்றிச் சந்தோஷத்துடன் தெரியப் படுத்துகிறேன்.

எடப்பள்ளி என்னும் படுகர் ஊரின் சத்ஜன சங்கம் அதிக விருத்தியடைந்து கொண்டுவருகிறது.

ஷை சபையினுடைய மேமீ 30உ யில் கூடிய சபையின் நடவடிக்கைப் படிக்குப்பிரசுரம் செய்யப்பட்ட விளம்பரம் ஒருகாபி அனுப்பி யிருக்கிறேன்.

அதைத் தாங்கள் எவ்விதமாய் உபயோகித்தாலும் உபயோகிக்கலாம்"

---

**கோரிக்கை.** இவர் எடப்பள்ளி லோகல் பண்டு ஸ்கூல் தலைமை உபாத்தியாயராகவிருப்பதோடு மேற்கண்ட சத்ஜன சங்கத்துக்கு அக்கிராசனாதிபதியாகவுமிருக்கிறார். அங்கங்கே பள்ளிக்கூட உபாத்தியாயர்களாகவிருப்பவர்கள் வேலையும் நமதுசபையின் நோக்கமும் ஒரே தன்மையவாகப்பொருந்தி யிருப்பதால் வெளிஜில்லாக்களிலுள்ள பள்ளிக்கூட உபாத்தியாயர்களெல்லாரும் அறிவைப் பரவச்செய்யும் சபை உபகாரிகளாகச் சேர்ந்து விவேக சிந்தாமணிக்குக் கையொப்பம்செய்து அப்பத்திரிகையைக் கொண்டு அறிவைப் பரவச்செய்ய நம்மோடு ஒத்துழைப்பார்களென்று கோருகிறோம்.

---

**எடப்பள்ளி சத்ஜன சங்கம்.** நமது உபகாரி அனுப்பிய இச்சபையின் விளம்பரப்பத்திரிகையைக் கீழே பிரசுரிக்கிறோம்:—

1. ஒவ்வொரு நாடும், நகரமும், பட்டணமும், ஊரும், சிறிய கிராமமும் தினே தினே நாகரீகத்திலும், கல்வியறிவிலும், வியாபாரத்திலும், கைத்தொழிலிலும் விருத்தியடைந்து கொண்டே வரும் பொழுது உத்தம மானிட ஜென்ம மெடுத்தவர்களாகிய நாம் என்ன காரணத்தினாலோ கொஞ்சமேனும் ஒரு விஷயத்திலாவது முன்னுக்கு வராமல் இருப்பதானது அதிக ஆச்சரியமானதாக விருக்கிறது.

2. நமது படுக ஜாதியாரில் இப்போது சிற்சிலர் படித்து நானாவித அலுவல்களில் பிரவேசித்திருப்பதை, நாம்பார்த்து சந்தோஷத்தை அடைவதுடன் பலரால் புகழத்தக்கதாயு மிருக்கிற விஷயம் நாம் அறிந்ததே.

3. நம் ஜாதியாருக்குள் நீடித்த காலமாய் குடிகொண்டிருக்கிற சில ஆபாசமானவைகளை நாம் குற்றமென்றும் செய்யத்தகாதவை என்றும் செவ்வையாய்த் தெரிந்திருந்தும் அதைப்பற்றி எவ்விதமாயாவது முயற்சி செய்து நீக்கி, விருத்தியடைவது நமது கடமையாயிருக்க அசட்டையாய் விடுவது உசிதமன்று.

4. ஆகையால் ஆதிகாலமாகிய மௌட்டீக காலத்தில் நமது முன்னோர்கள் ஏற்படுத்திய சில ஆபாசமான விதிகளிலிருந்து விலகி சீர்ப்பட்டாலொழிய, நாம் விருத்தியடைந்து, பிறரால் மதிக்கப்பட்டு சுகசௌக்கியமாய் வாழ்வதற்கு அனேகமாய் கூடாமலிருப்பதினாலே அடியில் வரும் தீர்மானங்களை, ஊர் ஜிதத்திற்கு கொண்டுவந்து, அதின்பிரகாரம் நடக்க நிச்சயித்திருக்கிறோமென்பதாக,வெளியூர்களிலுள்ள நமது ஜாதியாருக்குத் தெரிவித்து, அவர்கள் அபிப்பிராயத்தையும் கொண்டு முடிவான தீர்மானம்செய்து அதின்படி நடக்க வேண்டியதாயிருக்கிறது; அல்லது நமது தீர்மானங்களுக்கு ஒத்து வருகிற ஹட்டிகளில் மட்டுமாவது இதை நடவடிக்கைக்கு கொண்டு வரவேண்டியது நமது முக்கிய கடமையாக விருக்கிறது.

1. நமது வீடுகளில் சுத்த ஆகாயம் தாராளமாய் செல்லும்படி பெரியதாய் ஒரு ஜன்னலாவது வைக்க வேண்டுமென்பது.

2. நமது வீடுகளில் கண்ட இடங்களில் எச்சிலைத் துப்பி அசங்கியம் செய்யாமல், சுத்தமாய் வைத்திருக்கவேண்டுமென்பது.

3. நாம் வேலைக்குப் போகாத நாளாகிய திங்கட்கிழமைதோறும் வீடுவாசல்களை சாணியிட்டு மெழுகி, கேரிகளை சுத்தம்செய்து, ஒட்டடைகளை அடித்துக் கூட்டி, கோலமிட்டு, துணிதுண்டுகளை துவைத்து, ஸ்நானம் செய்து, ஆசாரபயபத்தியுடன் கடவுளை தியானிக்கவேண்டுமென்பது.

4. நாமே க்ஷவரம் செய்யும் வழக்கத்தையும் நமது இளம் ஆண்குழந்தைகளுக்கு இரண்டுவருஷத்திற்கு

மூர்த்தியும், பெண்களுக்கு பன்னிரண்டு வருஷம் வரையிலும் க்ஷவரம் செய்யும் வழக்கத்தை அடியோடு நிறுத்திவிடவேண்டுமென்பது.

5. பெண்கள் இலக்ஷணத்தை குறைப்பதாயிருக்கிற நெற்றியில் அவலக்ஷணமான பச்சைகுத்தும் வழக்கத்தை நிறுத்தவேண்டுமென்பது.

6. புருஷர்கள் நெற்றியில் விபூதியும், சந்தனமும், ஸ்திரீகள் மஞ்சளும், குங்குமமும் வைக்காமலிருக்கக்கூடாதென்பது.

7. பெண்குழந்தைகளையும்பாடசாலைக்கு அனுப்பி கல்வி கற்பிக்கவேண்டுமென்பது.

2. சவத்தை 24-மணி நேரத்திற்குமேல் ஹட்டிகளில் வைக்கக்கூடாதென்பது.

9. விலையுயர்ந்த வஸ்திரங்களையும் உடுப்புகளையும் சாவுக்கென்று சேகரித்துவைத்து, அதை தரித்துக்கொண்டு சாவுக்கு அலங்காரம் செய்துகொண்டுபோவதை நிறுத்திவிடவேண்டுமென்பது.

10.சாவுக்குப்போனவர்கள் கைகால் கழுவாமலும், சவத்தைத் தொட்டவர்களும், சவத்தைத் தொட்டவர்களை முட்டினவர்களும் ஸ்நானம் செய்யாமலும் வீடுகளில் பிரவேசிக்கக்கூடாதென்பது.

11. சவத்தை, இறந்தவருடைய நெருங்கின பந்துக்கள் தவிர மற்றவர்கள் தொடுவது அனுவசியமாதலால் அவ்வழக்கத்தை மற்றவர்கள் நிறுத்திவிடவேண்டுமென்பது.

12. சாவில் விலையுயர்ந்தஉடுப்புகளையும் வஸ்திரங்களையும் தரித்துக்கொண்டு, குதித்துவிளையாடும் அகோரமான வழக்கத்தை அடியோடு விட்டுவிடவேண்டுமென்பது.

13. சாவில்நூற்றுக்கணக்கானசெலவுசெய்துதேர் கட்டி சவத்தோடுவைத்து தீமூட்டி கொளுத்திவிடுவது பிரயோஜனமற்றதாயும், நஷ்டத்தையும், பின்பு வருத்தத்தையும், தரித்திரத்தையும் உண்டாக்குவதாயுமிருப்பதால் அவ்வழக்கத்தை விட்டுவிட வேண்டுமென்பது.

14. சந்தோஷமாகக் குதித்து ஆனந்தமடையஇஷ்டமிருந்தால் வருஷத்திற்கு ஒருதடவை குல தெய்வத்தைக் கொண்டாடும் நாளில் அக்கடவுளின் பொருட்டு ஓர் பெரிய தேர் கட்டி மங்கள வாத்தியத்துடன் விலையுயர்ந்த உடைகளைத் தரித்துக்கொண்டு குதித்துக்கொண்டாடி ஆனந்த மடைவதுடன் கடவுளையும் தியானிக்கவேண்டுமென்பது.

15. ஸ்திரீகள் தரிக்கும் உடையானது அவர்களுடைய இலக்ஷணத்தை குறைப்பதாயும் கோரப்படுத்துவதாயு மிருப்பதாலே, அதைத் தற்காலம் மாற்ற முற்றும் சாத்தியமில்லாத தாயிருப்பதி னிமித்தம் சிறுபெண்களுக்கு மட்டுமாவது சீட்டி முதலான துணிகளைக் கொண்டு, பாவாடை, தாவணி, சீலை முதலானதுகள் செய்து கொடுத்து நாகரீகத்தை யடைய முயற்சி செய்யவேண்டுமென்பது.

16. இனிமேல் கல்யாணத்தை பிராமணனை வைத்துக்கொண்டு மங்களவாத்தியத்துடன் சிறப்பாயும் விமரிசையாயும் நடத்தவேண்டுமென்பது.

17. ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டபிறகு அதையே ஊர்ஜிதமென்று எண்ணவேண்டுமே தவிர, யாதொரு காரணமுமின்றி அந்தப்பெண்ணை நீக்கவும் வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்யவும்கூடாது.சந்ததியினிமித்தம் வேறொரு பெண்ணை விவாகம் செய்வதாயிருந்தால் முன் செய்து கொண்ட பெண்ணையும் வைத்துக்கொண்டு காப்பாற்றவேண்டுமென்பது.

18. இனிமேல்ஆண்பெண்குழந்தைகளுக்கு மாதா, ஹிரியா, ஹாயி, காடே என்றுபெயரிடாமல் கிருஷ்ணா, மகாதேவா, இலக்ஷ்மி, பார்வதி என்ற தேவநாமங்களை வைத்தழைக்க வேண்டுமென்பது.

19. சுபகாரியங்களைச் செய்வதாயிருந்தால் நல்லநாள் பார்த்தே செய்யவேண்டுமென்பது.

20. அபினி, சாராயம், முதலிய லாகிரி வஸ்துக்களை உபயோகிக்கிறவர்களுக்கு புத்தி சொல்லி நிறுத்துவதற்கு முயற்சி செய்யவேண்டுமென்பது.

இதைப் படிக்கும் படகர் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஹட்டிகளில் கூடிய சீக்கிரத்தில் சபைசேர்ந்து இத்தீர்மானங்களின் விஷயத்தில் யோசனை செய்து அச்சபையாருடைய அபிப்பிராயங்களை இச்சபையாருக்குத் தெரியப்படுத்தவேணுமாய்க் கேட்டுக்கொள்ளப்படுகிறது. இதன்பிறகு ஓர்மகாசபை சேர்த்து ஊர்ஜிதமான தீர்மானங்கள் செய்து நடவடிக்கைக்குக் கொண்டுவர வேண்டியிருப்பதி னிமித்தம் எல்லோருக்கும் தெரியப்படுத்தலாயினோம்.

---

**நமதுவிண்ணப்பம்**

நீலகிரி ஜில்லா மற்ற ஜில்லாக்களைவிடப் படிப்புவிஷயத்தில் மிகவும் பின்னடைந்துள்ளது. அந்த் ஜில்லாவில் படகர் மற்ற ஜாதியார்களைவிடப் படிப்பில் பின்னடைந்தவர்கள். அவர்களுக்குள் விடாமுயற்சியாய்ச் சிலர்சேர்ந்துழைப்பதால் மேலேகண்ட மிகவும் மேலான உத்தம சீர்திருத்தங்கள் செய்துவர உழைப்பது சாத்தியமாகவிருந்தால் மற்றவிடங்களில் ஜனங்களைச் சேர்த்துப் பொதுவிஷயத்திற்குழைப்பது எவ்வளவோ சாத்தியமாக விருக்கவேண்டும். அங்கங்கே ஊக்கமும் விடாமுயற்சியுங்கொண்டு உழைப்பவர்கள் தான் முன்வரவேண்டும். அப்படிப்பட்டவர்கள் எங்கிருந்தாலும் நமக்கு எழுதிக்கொள்வார்களென்று கோருகிறோம்.

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

## கிழச்சிங்கத்தின் கதை.

மிருகங்களுக்கெல்லாம் அரசனான ஓர் ஆண் சிங்கமானது தன் வாலிபக்காலத்தில் மிகுந்த பலமும் அதிக வீரியமும் உக்கிரமா ஆண்மையோடும் காட்டில் திரிந்து கொண்டிருந்தது. அச்சிங்கத்துக்கு "வாதுக்காடின தேவடியாள் வயது முதிர்ந்தால் கழுதை மேய்ப்பாள்" என்பதுபோல் வயது முதிர்ந்தபடியால் உடம்பு தளர்ந்து மிகவும் தாழ்ந்த ஸ்திதியில் இருக்கும் காலத்தில் அந்தக் காட்டிலுள்ள சிங்கத்துக்கு தாழ்ந்த மிருகங்கள் யாவும், தங்களுக்கு அது வாலிபக் காலத்தில் செய்த கொடுமைகளையெல்லாம் எண்ணி ஒன்றாய்ச்சேர்ந்து தங்களுக்கு இருக்கும் குரோதத்தினாலும் அகங்காரத்தினாலும் ஒரேமனதாகிக் கிழச்சிங்கத்தின் மேல் வீழ்ந்து கோரைப்பல்லுள்ள காட்டுப் பன்றிகள் கோரைப்பல்லுகளால் கீறவும், ரிஷபங்கள் கூர்மையுள்ள கொம்பினால் முட்டிக் காயப்படுத்தவும், கழுதை பின்னங் காலால் உதைக்கவும் நேர்ந்தபடியால் சிங்கமானது மற்ற ஜந்துக்களெல்லாம் தன்மேல் விழுந்தது தனக்குப் பெரிதாயிருக்கவுமில்லை. அதனால் வருத்தமுமில்லை. மிருகங்களுக்கெல்லாம் கடைகஷ்டமான கழுதையின் குதிகால் தன்மேற்பட்டதைக் குறித்துத் தனக்கு மனதில் அதிக துக்கமுண்டாகி நாம் மற்ற மிருகங்களால் வருத்தமடைந்து இறந்து போவது பெரிதல்ல. இந்த கழுதைக்காலால் உதைபட நேர்ந்ததைப்பார்க்கிலும் பதினாயிரம் தரம் இறந்தாலும் இறக்கலாம் என்று கடைமொழியாகச் சொல்லிக்கிடந்தது.

நீதி:—ஒருவன் வாலிபத்தில் தானே நல்லவனென்று பேரெடாதவனுக்கு கிழத்தனம் வந்தபோது யாரு மதிக்கமாட்டார்.

கதாசாரம்.—ஒருவன் பிறந்தது முதல் பாலயத்திலேயே தாய்தந்தை உபாத்தியாயர் இம்மூவருக்கும் அடங்கி அவர்கள் போதிக்கும் போதனையைக்கேட்டு நடந்து யௌவனகாலத்தில் நல்லோருடன் சிநேகம் செய்து நன்னடக்கை கல்வியொழுக்கத்துடன் நடந்து நல்ல பேரெடுத்துக் கொள்ளுகிறானோ அவனுக்கு வயது முதிர்ந்து தள்ளாமை வந்தகாலத்தில் யாவரும் மரியாதையும்மதிப்பும்வைப்பார்கள்.

இந்தக் கதையால் தெரியவருகிற தென்னவென்றால் பொறுமை, கோபம், கடுஞ்சொல், ஆசை இவைகளை அதிகமாகக் கையாளலாகா தென்பதாம்.

மஹாராணி.

## துன்மன சாட்சியைக் குறித்து.

மடியில் நெருப்பு:—மனசாட்சியே! மனசாட்சியே! நீஎன்ன வஸ்துவாயிருக்கிறாய்? 1. ஓயாமல் முறையிடுகிறாய். (2) எதிர்பேசக்கூடாத சாட்சியாயிருக்கிறாய். (3) இரவும் பகலும் இளைப்பு அடையாத பிரசங்கியா யிருக்கிறாய். (4) கலைக்கவும் மறைக்கவும் படாத சூட்டுத்தழும்பா யிருக்கிறாய். (5) ஆறாப்புண்ணாயிருக்கிறாய். (6) சாகாமல் பிடுங்கிக் கொண்டிருக்கிற பூச்சியாயிருக்கிறாய். (1) அவியாமல் எரிந்து கொண்டிருக்கிற அக்கினியாயிருக்கிறாய். ஆகையால் துன்மனசாட்சி படாதுக்கூடாது.

## கடன்படலைக் குறித்து.

பெரும் வாழ்வை தேடுகிற எவரும் கடன் படலாகாது. கடன், வாழ்வை கெடுத்துவிடும். குடிவாழ்வைத் தேடவேண்டும்.

## கர்வித்த கன்றுக்குட்டி.

இளங்கன்றுக்குட்டி யொன்று கழனியில் உழுகிற எருதுகளைப் பார்த்து நீங்கள் என் இப்படி ஒருவனுக்கு அடிமையாகி இந்த முழங்கால் சேற்றிலும் தண்ணீரிலும் கழுத்து நோக நுகத்தடியை வைத்துக் கயிற்றால் கட்டி பின்னாலே பளுவாகிய கலப்பையையொன்றை மாட்டி தாத்துக்கோலால் குத்த இழுத்துக்கொண்டு சங்கடப்படுகிறீர்களே. நீங்கள் இப்படியெல்லாம் பாடுபட்டும் உங்களுக்கு நல்ல புல்லும் குடிக்க நல்ல ஜலமுந்தான் கிடைக்கமாட்டாதே நீங்ள் இழுக்கமாட்டாமல் களைத்து விழுந்து கிடதாலும் உங்கள் முகத்தில் கொஞ்சம் பச்சைத் தண்ணீரைக்கூட தெளிக்கமாட்டார்களே; என்னைப்பாருங்கள் என்னிஷ்டப்படிக்கெல்லாம் ஓடுகிறேன் நல்ல புல்லையும் நல்ல ஜலத்தையும் குடிக்கிறேன்; என்று இளங்கன்று பயமறியாதென்பதுபோல துள்ளுகாளைத்தனமாய்ச் சொல்லிப்போய்விட்டது. சற்றுநேரத்திற்கெல்லாம் கிறுது போசின கன்றைப் பிடித்து அதன்கழுத்திற் பூமாலைபோட்டுப் பிடாரியாருக்கு பலியிட்டிருப்பதை உழுதுவிட்டுப்போகிற மாடுகள் அதன் காதினிடமாகப்போய் ஐயோ இவ்வளவு சீக்கிரத்தில் இந்தகதி அடைகிறவன் தானாதுள்ளி தெப்பென்று விழுந்தாயே: இப்போது நீ சுகமாவென்று சொல்லிப்போய் விட்டதாம்.

மஹாராணி.